# ஆனந்தரங்கப் பிள்ளை



ஆசிரியர்:
ரா. தேசிக பிள்ளை, பி.ஏ., பி.எல்.,
புதுச்சேரி






எம். ஆர். அப்பாதுரை, B. A.,
:: சென்னை ::
பதிப்புரிமை] 1943 [விலை ரூ. 1.

# முகவுரை

பதினெட்டாம் நூற்ருண்டில் பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவில் தங்கள் ஆதிக்கத்தை நிலை நிறுத்தப் பெருமுயற்சி செய்து வந்தார்கள். ஆங்கிலேயர்களும் அத்தகைய முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். இவ்விரு திறத்தார்களும் தங்களுள் பகைமை கொண்டு நாட்டில் இருந்த அரசர் சிலரின் உதவியை நாடியோ, அவர்களிற் சிலரை வெறுத்தோ, தங்கள் கொள்கைகளை நிறைவேற்றிக்கொள்ள நினைந்தார்கள். இதன் காரணமாக இந்திய நாடு—சிறப்பாகத் தென்னாடு—பல திறப்பட்ட இன்னல்களுக்கு இருப்பிடமாய்ச் சீர்கெட்டு வருவதாயிற்று.

இந்த நிலைமையில் பிரெஞ்சுக்காரர்களுக்குப் பெருந்துணையவராயிருந்து, தம் அறிவாலும் ஆற்றலாலும், நாட்டு மக்களின் நன்மையே பெரிதெனக் கருதி, அப்பிரெஞ்சுக்காரர்களின் ஆளுகையைச் சிறந்த முறையில் செலுத்தச் செய்தவர் புதுவை ஆனந்தரங்கப் பிள்ளை ஆவார். அவர் தம் வாழ்நாளில் மேற்கொண்ட காரியங்கள் யாவும் அருமையும் பெருமையும் வாய்ந்தனவாகும். நாட்டு வரலாற்றின் சிறந்த பகுதியில் இடம் பெறப் பெரிதும் தகுதி வாய்ந்த அப்பெரியாரின் வாழ்க்கை வரலாற்றைக் குறித்துத் தமிழ் மொழியில் இதுகாறும் ஒரு நூலேனும் வெளிவந்திலது. பிரெஞ்சு வரலாற்று ஆசிரியர்களில் ஒரு சிலரும், ஆங்கில ஆசிரியர்களில் இரண்டொருவரும் அவரைப்பற்றித் தத்தம் நூல்களில் குறிப்பாகச் சில சொல்லிப் போந்தனரேயன்றி, அவர் வரலாற்றைத் தெளிவாக வரைந்தாரிலர்.

தமிழ் நாட்டில் தமிழர் தலைவராய்த் திகழ்ந்த அறிஞர் ஆனந்தரங்கப் பிள்ளையைப்பற்றி யான் ஆராய்ந்த அளவில் கிடைத்த செய்திகளைக்கொண்டு வெளி வரும் இந்நூல் அக்குறையை ஒருவாறு நீக்குமெனக் கருதுகின்றேன். செயற்கரிய செய்த இச் சீரியரின் வரலாற்றைப் படித்தறிவது தமிழ் மக்கட்குப் பெரிதும் பயனுடைத்தாமாதலின், தமிழ் மக்கள் இந்நூலை ஏற்று ஆதரிப்பார்களென நம்புகின்றேன்.

இதனை எழுதி வெளியிடுவதற்கு எனக்கு ஊக்கமும் உதவியும் அளித்த அன்பர்களுக்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகுக!

ரா. தேசிகன்

# பொருளடக்கம்

அனுபந்தம் :



# 1. தோற்றுவாய்

'தோன்றிற் புகழொடு தோன்றுக !'

என்னும் பொய்யா மொழிக்கு இலக்கியமாய்த் திகழும் ஆனந்தரங்கப் பிள்ளை, சென்னையைச் சேர்ந்த பிரம்பூரில், சர்வதாரி ஆண்டு பங்குனித் திங்கள் 21-ஆம் நாள் சனிக்கிழமை (கி. பி. 1709) பிறந்தார். அவர் தகப்பனார் திருவேங்கடப் பிள்ளை சிறிது காலத்துக்குப் பின் புதுச்சேரியிற் குடியேறி அங்கேயே தமது உறைவிடத்தை நிறுவிக்கொண்டு தங்கிவிட்டார். அக்காலையில் புதுச்சேரியில் வாழ்ந்து வந்த அவர் மைத்துனராகிய நைனியப்பப் பிள்ளை என்பவரது வேண்டுகோளே திருவேங்கடப் பிள்ளை புதுச்சேரிக்கு வந்தமைக்குக் காரணமாயிற்று.

கி. பி. 1714-ஆம் ஆண்டு புதுச்சேரியில்இந்து சம்பிரதாயங்களுக்கு இழைக்கப்பட்ட இடை

யூறுகளைத் திருவேங்கடப் பிள்ளை எதிர்த்துப் போராடியதாகத் தெரிகிறது. அப்போராட்டத்தின் பயனாக, நாட்டு மக்களின் அபிமானத்தையும் ஆதரவையும் அவர் பெரிதும் பெற்றமையினால், பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தார்,[1] தமது வியாபாரம் அவர் உதவியினால் மிகப் பெருகும் என்னும் எண்ணங்கொண்டு, அவரைத் தம் கூட்டத்திற்கு உதவித் தரகராக நியமனஞ் செய்தனர். பெரும்பாலும் திருவேங்கடப் பிள்ளையின் வேலை, கூட்டத்தாருக்கும் நாட்டு மக்களுக்கும் இடையே நின்று, வர்த்தக விருத்திக்கு ஆவன செய்வதாகவே இருந்தது. சில காலத்திற்குப் பின் உதவித் தரகர் நிலையிலிருந்து அவரை மேம்படுத்திக் கிழக்கிந்திய கூட்டத்தாருக்குத் திவானாக அவர்கள் நியமனஞ் செய்தார்கள்.

இந்நியமனத்திற்குப் பின் சில ஆண்டுகள் கழித்துத் திருவேங்கடப் பிள்ளை உயிர் துறந்தார். அவருக்குப் பதிலாகக் கனகராய முதலியார் என்பவர் திவான் ஆயினார். அவரும் கி. பி. 1746-ஆம் ஆண்டில் இறந்துவிடவே, அடுத்த ஆண்டில் ஆனந்தரங்கப் பிள்ளை அப்பதவியில் நியமிக்கப்பட்டார்.

திருவேங்கடப் பிள்ளை திவானாய் இருந்த போது ஆனந்தரங்கப் பிள்ளை அவருக்கு வேண்டிய உதவிகளை அவருடனிருந்து செய்து வந்தமையினால், கிழக்கிந்திய கூட்டத்தாரின் விவகாரங்களை நன்கு அறிந்திருந்தார். இதுவே, அவருக்குத் திவான் பதவி கிடைப்பதற்குக் காரணமாயிற்று.

1. Compagnie francaise des Indes Orientales



## 2. அரசியல் திரு

ஆனந்தரங்கப் பிள்ளை திவானாய் அமர்ந்தது முதல் கிழக்கிந்திய கூட்டத்தாரிடத்தில் பெரிதும் நம்பிக்கை கொண்டு, பிரெஞ்சுக்காரர்களுக்குத் தகுந்த உதவிகளைக் காலா காலத்தில் செய்து, அவர்கள் நன்மதிப்பைப் பெற்று, நாட்டு மக்களுக்குத் தலைவர் என்னும் நிலையையும் அடைந்து, அரிய பெரிய செயல்களைச் செய்து வந்தார். அவர் அரசியற்றுறையில் மிக ஈடுபட்டு, அரசியல் அரங்கத்தில் தோன்றிய பல நிபுணர் களோடு நெருங்கிப் பழகி, அவர்கள் மேற் கொண்ட செயல்களில் கலந்து உழைக்கலானார். அப்பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றி லும், அவ்வப்போது நேர்ந்த முரண்பாடு சமரசம் முதலியவற்றிலும் அவர் முதல்வராயிருந்து ஒவ் வொன்றையும் நேர்மைப்படுத்திவந்தார். பிரெஞ்சு அரசாங்கத்தாருக்கும், இந்திய நாட்டுச் சிற்றரசர் களுக்கும் மன வேறுபாடு ஏற்பட்ட போதும்,

பதவி ஏற்றல்

உறவு உண்டான போதும், அவ்வேறுபாட்டை நீக்குவதிலும், உறவை உரப்படுத்துவதிலும் ஆனந்தரங்கப் பிள்ளையே முன்னின்று முயன்று வந்திருக்கிறார். நாட்டுச் சிற்றரசர்கள் அவர்பால் கொண்டிருந்த நட்பும் மதிப்பும் மிகவும் மாண் புற்று விளங்கின. சிற்றரசர் அனைவரும் அவரை மிகவும் பாராட்டினர். கி. பி. 1749-ஆம் ஆண்டில் முஸபர்ஜங்கு என்பவர், ஆனந்தரங்கப் பிள் ளையை மூவாயிரம் குதிரைகளுக்கு அதிபராக்கி, அம்மூவாயிரம் குதிரைகளையும் அவருக்குத் தந்து, 'மன்சுபேதார்' என்னும் பட்டமும் வழங்கினார். அப்பட்டம் அக்பர் காலத்ததாயிருந்திருப்பின், பட்டம் பெற்றவருக்கு அஃது ஆண்டொன்றுக்கு இரண்டிலட்சத்து நாலாயிரம் ரூபாய் வருமானத் தைத் தருவதாகும். அப்பட்டம் பெற்ற சிறிது காலத்துக்குப் பின் ஆனந்தரங்கப் பிள்ளைக்கு 'வஜாரதராய விஜயர்' என்னும் பட்டமும் வழங்கப்பட்டது. பின்னர் அவர் செங்கற்பட்டுக் கோட்டைக்குத் 'தளபதி' ஆகவும், செங்கற்பட்டு ஜில்லா முழுமைக்கும் 'ஜாகீர்தார்' ஆகவும் நிய மனம் பெற்றார். அப்பட்டங்களும் நியமனங்களும் அவரைப் பின்னும் மேன்மைப்படுத்தி, அவரது புகழை எங்கும் பரவச் செய்தன. அவர் மற் றச் சிற்றரசர்களைப் போலத் தாமும் ஒரு மன்ன ராகவே ஆதிக்கம் செலுத்துவாராயினர். பிரெஞ் சுக்காரர் அதிகாரத்தின் கீழிருந்த மக்களேயன்றி மற்றவரும் அவரை வணங்கிப் போற்றும் நிலை உண்டாயிற்று. அக்காலத்தில் புதுச்சேரிக்குக்

கவர்னராயிருந்த துய்ப்ளேக்ஸ்[1] அரசாங்க அதிகாரியாயிருந்தும், புதுச்சேரிக் குடிமக்கள் ஆனந்தரங்கப் பிள்ளையையே தங்களை ஆள்பவராகக் கருதி வந்தார்கள். அதையறிந்த துய்ப்ளேக்ஸ், ஆனந்தரங்கப் பிள்ளையை இந்திய மக்களின் தலைவராக நியமனம் செய்துவிட்டார்.

துய்ப்ளேக்ஸ் அரசாங்கத்தில் மற்றவர்களுக்கில்லாத உரிமைகளை ஆனந்தரங்கப் பிள்ளை பெற்றிருந்தார். அவர் பல்லக்கில் மேள வாத்தியத்தோடு கவர்னர் மாளிகையினுள் போகவும், தங்கப் பிடியிட்ட கைத்தடி வைத்திருக்கவும், பாதரட்சை அணிந்து கவர்னரின் காரியாலயத்திற்குச் செல்லவும் அவருக்கு உரிமை அளிக்கப்பட்டிருந்தது. நாள்தோறும் காலையில் கவர்னர் துய்ப்ளேக்ஸ் சிற்றுண்டி அருந்தியதும் ஆனந்தரங்கப் பிள்ளையைத் தமது அவைக்கு வரவழைத்து, நாட்டு நடப்புகளைப் பற்றிய பலதிறச் செய்திகளையும், யோசனைகளையும் கேட்பது வழக்கம். ஆனந்தரங்கப் பிள்ளை வியாபார சம்பந்தமான செய்திகளைத் தெரிவித்து வந்ததன்றி, அரசியல் காரியங்களையும் அவருக்கு அறிவித்து வருவார்; மேலும், தினந்தோறும் ஊர்ச் சாவடியில் வரும் வழக்குகளில் தம்மால் செய்யப்படும் தீர்ப்புகளைப் பற்றியும் அவருக்கு எடுத்துரைப்பார்.

*தனி உரிமைகள்*

நாட்டு மக்களிடையே ஏற்படும் சாதாரண வழக்குகளை ஆனந்தரங்கப் பிள்ளையே ஆராய்ந்து

1. Dupleix

தகுந்த நீதியை வழங்கும் அதிகாரத்தைப் பிரெஞ்சுக்காரர் அவருக்கு அளித்திருந்தனர். ஊர்ச்சாவடியே அக்காலத்தில் நீதி மன்றமாய் நிலவி வந்தமையினுல், ஆனந்தரங்கப் பிள்ளை தினந்தோறும் அச்சாவடிக்குச் சென்று, விசாரணைக்குக் குறிப்பிட்ட வழக்குகளை நன்கு விசாரித்து, அவற்றுக்கேற்றபடி தீர்ப்பளித்து வந்தார். கிழக்கிந்திய கூட்டத்தைச் சார்ந்தவையும், பிரெஞ்சுக்காரர்களின் அரசுரிமையைப் பொறுத்தவையுமான பெரிய வழக்குகள் மாத்திரம் அரச உயர் சபை[1] என்னும் ஒரு நீதி மன்றத்தில் ஆராயப் பெற்றுத் தீர்ப்பளிக்கப்பட்டு வந்தன.

அரசியல் பற்றிய செய்திகளைச் சரியாக அறிய வேண்டுமானுல், ஆனந்தரங்கப் பிள்ளையைத்தான் அந்நாளில் எவரும் நாடவேண்டியிருந்தது. உறுதியான செய்திகளை அதிவிரைவான வழியில் அவர் அவ்வப்போது அறிந்து வந்தார்; இதற்காகத் தம் கீழுள்ள நாணயம் வாய்ந்த முதலாளிகளை ஆங்காங்கு அனுப்பி வைத்து, அவ்விடங்களின் நிலைமையை உடனுக்குடன் தமக்கு அறிவிக்கும் ஏற்பாட்டைச் செய்திருந்தார். இம்முறையே அவர் துய்ப்ளேக்ஸுக்குக் காலாகாலங்களில் நடந்து கொள்ள வேண்டிய வழிகளை எடுத்துக்கூற ஏதுவாயிற்று. பொதுவாக, அவர் இந்தியாவிலிருந்த மன்னர் பெரும்பாலாரை அறிந்திருந்தாரெனினும், சிறப்பாகத் தென்னிந்தியாவில் அரசு செலுத்திய மன்னர் ஒவ்வொருவரின் மாண்பையும், வேட்கையையும் நன்கு தெரிந்திருந்தார். ஆனந்தரங்கப்

1. Conseil Superieur

பிள்ளை புதுச்சேரியில் வாழ்ந்தமையால், தென்னாட்டு மன்னர்களை அவர் அடிக்கடி கண்டு பேசும் வாய்ப்புக் கிடைத்ததன் பயனாக அவர்களுடைய குண விசேடங்களை மற்றவர்களைக்காட்டிலும் நன்கு அறிந்திருந்தார். இன்ன மன்னருக்கு இன்ன வெகுமானஞ் செய்தால் உவகையேற்படுமென்பது அவருக்குத் தெரியும். இதனால், பல சமயங்களில் அவர் துய்ப்ளேக்ஸின் மூலமாக ஓர் அரசருக்கு அழகிய புரவிகளும், இன்னோர் அரசருக்கு நல்ல நாய்களும், மற்றொரு மன்னருக்குப் பரிமளப் பொருள்களும் சன்மானமாகக் கொடுக்கச் செய்திருக்கிறார்.

பிரெஞ்சு எல்லைக்கு வெளிப்பட்ட பல இடங்களின் நிலைமையைத் தெளிவாக அறிந்து, அதற்குத் தக்கவாறு பிரெஞ்சு அரசாங்கத்தினை நன்முறையில் நடத்தி வருவதற்கு அவர் துய்ப்ளேக்ஸுக்கு உறுதுணையாய் இருந்தமையால், அவர் அவ்வரசாங்கத்திற்கு ஓர் அரிய வெளிநாட்டு மந்திரியாராகக் கருதப்பட்டு வந்தார் ; வெளிநாட்டு மந்திரியாராய் மட்டும் திகழ்ந்தாரில்லை; பெருமைவாய்ந்த ஓர் உள்நாட்டு மந்திரியாராயும் விளங்கினார். உள் நாட்டு விவகாரங்களிலேதான் அவருடைய அறிவும் ஆற்றலும் மிகவும் பாராட்டக் கூடியனவாயிருந்தன. இந்திய மக்களிடையே அவர் செல்வாக்குப் பெற்ற சர்வாதிகாரியாயிருந்து வந்தாரென்று கூறலாம். நகரின்கண்ணே பரவுஞ் செய்திகளையும் உலவும் வதந்திகளையும் அவ்வப்போது ஏவலாளர் மூலமாக அறிந்துகொள்வதில் அவருக்கு ஆர்வம் மிகுதியுமுண்டு. அப்படி அறியும் செய்திகளுக்குத்

தக்கவாறு நேர்மை தேட என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமோ, அவைகளை ஆராய்ந்து உடனுக்குடனே செய்து வந்தார். தம்மால் அறியப்படும் ஊர்ச்செய்திகள் மெய்யாயினும், ஒருகால் பொய்யாயினும், அவை நாட்டு மக்களின் மனப்பான்மையை வெளிப்படுத்துகின்றன என்பது அவருடைய கருத்து. அந்த மனப்பான்மையை உடனுக்குடன் தெரிந்துகொண்டு மக்கள் நலம் பெறவேண்டிய மார்க்கத்தை அவர் தேடுவதில் கண்ணுங்கருத்துமாய் இருந்து வந்தார். கவர்னர் துய்ப்ளேக்ஸும் தாம் செய்யும் எக்காரியத்தையும் ஆனந்தரங்கப் பிள்ளையின் அபிப்பிராயப்படியே செய்யலானார். இந்திய மக்களின் பழக்க வழக்கங்களுக்கு இடையூறு நேருமேல், அவர்கள் மனம் புண்பட்டு அரசாங்கத்தினர்பால் வெறுப்புக்கொண்டு இடர் விளைக்கக் கூடுமாகையால், இத்தகைய துறைகளில் அனுபவம் மிகவும் அடைந்திருந்த ஆனந்தரங்கப் பிள்ளையின் யோசனைகளைக் கேட்டு நடக்க வேண்டுவது துய்ப்ளேக்ஸின் கடமையாய்விட்டது. நாட்டு மக்களுக்கு அவர்கள் பெருந்தனவந்தர்களாயினும், வர்த்தகர்களாயினும், தொழிலாளர்களாயினும், அவர்கள் வாழ்க்கை முறையில் எவ்வித மாறுதலும் ஏற்படாவண்ணம் துய்ப்ளேக்ஸ் செய்யும் விதி விலக்குகளைக் கண்காணித்து வந்தார். குடிமக்களில் ஒவ்வொரு வகுப்பாருக்கும் என்னென்ன உரிமைகள் உண்டோ, அவ்வுரிமைகள் அனைத்தும் பிறழாவண்ணம் அவர் காத்து வந்தமையினால், மன வேறுபாடின்றி மக்கள் மாண்புற்று வாழ்ந்து வந்தார்கள்.

ஆனந்தரங்கப் பிள்ளை துய்ப்ளேக்ஸிடத்தில் எவ்வளவு அன்பும் நட்புங் கொண்டிருந்தாரோ, அவ்வளவு துய்ப்ளேக்ஸின் மனைவியார்பால் அவர் வெறுப்புக்கொண்டிருந்தார். துய்ப்ளேக்ஸ் மனைவியாரின் குணம் அவருக்கு ஒரு சிறிதும் பிடிக்கவில்லை. பல செயல்கள், முக்கியமாக அரசியல் சம்பந்தப்பட்டவை, அவ்வம்மையாரால் கேடுற்றனவென்பது தெரிய வருகிறது. துய்ப்ளேக்ஸ் தம் மனைவியாரின் தீக்குணத்திற்கஞ்சி நடக்க வேண்டியிருந்தது.

புதுச்சேரியில் அக்காலத்தில் செலாவணியாயிருந்த நாணயங்கள் ஆனந்தரங்கப் பிள்ளையினுலேயே அடிக்கப்பெற்றுப் பொது மக்களிடையே உலாவி வந்தன. தங்க நாணயங்களேயன்றி, வெள்ளி செம்பு நாணயங்களும் நடை முறையில் இருந்தனவென்பது கூறப்படுகிறது. தங்கசாலை யொன்று புதுச்சேரியில் முன்பு இருந்து வந்தது எவரும் அறிந்ததாகும். தங்கசாலை என்னும் ஒரு தெருவும் கி. பி. 1938-ஆம் ஆண்டு வரையில் புதுச்சேரியில் வெள்ளையர் வாழ்ந்த பகுதியில் இருந்து வந்தது அதற்கு ஒரு சான்றாகும்.

மேலே குறித்த தங்கசாலையில் நாணயங்கள் அடிப்பதற்கு வேண்டிய உலோகங்களும், கருவிகளும் ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதிக்கத்திலேயே இருந்து வந்தன. நாணயங்களைச் செய்வித்து வெளியிடும் காரியத்தில் ஆனந்தரங்கப் பிள்ளை முறை வழுவாது, நேர்மையாயும், நம்பிக்கையாயும் நடந்து வந்ததைப் பற்றிப் பிரெஞ்சு அரசாங்கத்தினரே அவரைப் பாராட்டுவாராயினர்.

புதுச்சேரிப் பிராந்தியங்களில் அடிக்கடி நிகழ்ந்த சண்டைகளின் காரணமாக நாணயங்கள் அடிப்பது சிறிது காலத்திற்குப் பின் நின்றுவிட்டது. *

போர் முறை

புதுச்சேரியை ஆங்கிலேயர் பல பக்கங்களிலும் போர்க்கோலங் கொண்டு தாக்கும் போது அவர்களை எதிர்த்து நிற்பதற்காக ஆனந்தரங்கப் பிள்ளை படை திரட்டின முறையும், எவ்வகையில் எதிரிகளைத் தாக்க வேண்டுமென்று

* புதுச்சேரியிலிருந்த தங்கசாலை, 1793-ஆம் ஆண்டுவரையில் நடந்து வந்தது. அதன் பின் சிறிது காலம் அது நிறுத்தப்பட்டு, கி. பி. 1815-ஆம் ஆண்டு மீண்டும் தொடங்கப் பெற்றது. பிரெஞ்சுக்காரர்கள் நாணயம் அடிப்பதை ஒருவாறு தடை செய்யும் பொருட்டு ஆங்கில அரசாங்கம் சில ஏற்பாடுகளைச் செய்தது. அவற்றின் காரணமாகப் புதுச்சேரித் தங்கசாலை மீண்டும் நடைபெருது நின்றது. ஆயினும், அதில் ஈடுபட்டோர் செய்து வந்த முயற்சியின் பலனாக, அத்தங்கசாலை கி. பி. 1837-ஆம் ஆண்டில் மீண்டும் வேலையைத் தொடங்கிற்று. எனினும், இடையில் நேர்ந்த பல இன்னல்களால் கி. பி. 1840-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் அதனை மூடிவிட வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அவ்வாண்டுக்குப் பின் அது தொடங்கப்பெருமல் முழுதும் மறைந்தொழிந்தது. பிரெஞ்சு எல்லையில் வழங்கி வந்த பிரெஞ்சு நாணயங்களும் மறைந்துபோயின. அவற்றிற்குப் பதிலாக ஆங்கில நாணயங்கள் வழங்கப்பட்டன. இந்நிலைமையிலும்கூட இன்றும் புதுச்சேரியில் பழைய நாணயங்களின் பெயர்களிற் சில மறைந்ததாகக் காணப்படவில்லை. ஆங்கில இரண்டணு நாணயம்

துய்ப்ளேக்ஸுக்கு ஒரு தளகர்த்தர் போன்று இருந்து உபாயங்களை அவர் உணர்த்தி வெற்றியைத் தேடி வைத்த திறனும், அவரது போர்த் தந்திரத்தின் வல்லமையைக் குறிப்பனவாகும்.

செயிண்டு டேவிடு கோட்டையின்மீது [1] பிரெஞ்சுக்காரர்கள் படையெடுத்த சமயத்தில், பிரெஞ்சு சேனையைத் திறமையோடு நடத்துவதற்கு ஆற்றல் வாய்ந்த தளகர்த்தர் ஒருவர் இல்லாமையால், ஆனந்தரங்கப் பிள்ளை பராதியை [2] நியமித்து அனுப்பும்படி கவர்னருக்கு யோசனை கூறினது இங்குக் கவனிக்கத் தக்கது. அப்பொழுது பராதியைப்பற்றிக் கவர்னருக்கு அவர் கூறியதாவது:—

“பகைவர்கள் பராதியின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்குகிறார்கள். பராதியின் தலைமையில் படைகள் வருகின்றன என்பதை அவர்கள் அறிந்தால், பயந்தோடிப் போவது திண்ணம். இதற்குச் சான்றாக ஒன்று கூறுவேன்: எங்கள் குலத்தில் முன் ஒருகால் துப்பாக்கி இலட்சுமண நாயகன் * என்பவன் ஒருவன் இருந்தான். அவ

---

‘பணம்’ என்றும், பை, ‘காசு’ என்றும் கூறப்படுகின்றன. பணம், காசு என்பன பழைய நாணயங்களின் பெயர்களாகும்.

1. Fort Saint David 2. Paradis

* துப்பாக்கி இலட்சுமண நாயகன் யார் என்று அறிவதற்கியலவில்லை. இவன் ஒருகால் துப்பாக்கிக் கிருஷ்ணப்ப நாயகனாக இருக்கலாம். துப்பாக்கிக் கிருஷ்ணப்ப நாயகன் செஞ்சியை ஆண்ட யாதவ அரசர்களில் ஒருவன். கோன் பரம்பரையினருக்குப்

னுக்குப் பகைவர்கள் மகமதியர்கள். அவர்கள் தங்கள் குதிரைகளை நீரருந்தும்பொருட்டுக் குளங் களுக்கு ஓட்டிச் செல்வதுண்டு. அப்பொழுது அக் குதிரைகள் நீர் அருந்தாமல் தலையைத் திருப்பித் தாங்கள் வந்த வழியையே பார்த்துக்கொண்டிருக் குமாம். அக்குதிரைகளை ஓட்டிப் போகிறவர்கள், 'துப்பாக்கி இலட்சுமண நாயகன் இங்கில்லை. நீங்கள் நீர் அருந்துங்கள்,' என்று கூறுவார்களாம். உடனே அக்குதிரைகள் அச்சம் நீங்கி நீர் அருந்து மாம். அது போல, நம் பகைவர்கள் பராதியின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நிலை கலங்கி ஓடி விடுவார்கள். என்னுடைய இச்சொல் வெற் றுரையன்று. இதன் உண்மையை நீங்கள் விரை வில் அறிவீர்கள்."

படைகள் போர் புரிந்த காலத்திலும் ஆனந்த ரங்கப் பிள்ளை மிகுந்த தைரியத்தோடு அவற் றுக்கு வேண்டும் உதவிகளைச் செய்வதற்குப் போர்க் கருவிகளையும், உணவுப் பொருள்களையும் அமர்க்களத்தே ஆட்களுடன் சென்று உதவி வந்தார்.

பிரெஞ்சுக்காரர்கள் சென்னையை முற்றுகை யிட்டபோது துய்ப்ளேக்ஸ் மாற்றாரின் ஊர்கள் சிலவற்றைத் தீக்கிரையாக்க வேண்டுமென்று எண்ணினர்; அவ்வூர்களினின்றும் தம் ஊர்களை

---

பின் செஞ்சியின் செங்கோலை ஏற்ற குறும்பர்கள் வீழ்ந்துபடவே, நாயகர்கள் செஞ்சியைக் கைப்பற்றி னார்கள். அவர்களில் சிறப்பு வாய்ந்தவன் துப்பாக்கிக் கிருஷ்ணப்ப நாயகன்.

வேறு பிரித்துத் தம் ஆட்கள் அவற்றை அறியும் பொருட்டு முறையொன்றை ஆனந்தரங்கப்பிள்ளை யோடு ஆராய்ந்துகொண்டிருந்தார். "நம் ஊர் ஒவ்வொன்றிலும் வெள்ளைக்கொடி ஒன்று ஏற்று வித்தல் நலமென்றுஎண்ணுகிறேன்," எனத்துய்ப் ளேக்ஸ் கூற, ஆனந்தரங்கப் பிள்ளை, "இஃது அவ்வளவு பொருத்தமாகாது. மாற்றுருக்குச் சொந்தமாயுள்ள ஊர்களும் இதனைக் கண்டு வெள்ளைக் கொடிகளைப் பறக்கவிடும். இதனால், காரியம் கைகூடாமற் போய்விடும். வெள்ளைக் கொடியை விடுத்து இலச்சினையிட்ட கடிதம் ஒன்றை ஒவ்வோர் ஊருக்கும் அனுப்பி வைத்தல் தக்கது," என்று விளம்பினர். அவர் விரும்பிய படியே இலச்சினையிட்ட கடிதங்கள் அவ்வூர் களுக்கு அனுப்பப்பட்டன.

துய்ப்ளேக்ஸ் தமது போரை வெற்றிகர மாக முடித்தற்பொருட்டு ஆனந்தரங்கப் பிள்ளை வாயிலாகப் பல ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அவற்றில் ஒன்று, ஒற்றர்களைப் பிரெஞ்சு அரங் கத்தில் வரவொட்டாது தடுத்ததாகும். கி. பி. 1748-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28-ஆந் தேதி துய்ப்ளேக்ஸும் ஆனந்தரங்கப் பிள்ளையும் போர் நிலைமையைக் குறித்து ஆராய்ச்சி செய்துகொண் டிருந்தனர். அப்பொழுது துய்ப்ளேக்ஸ் ஆனந்த ரங்கப் பிள்ளையை நோக்கி, "அரங்கப்பரே, நீர் முயன்றால் ஆங்கில ஒற்றர்கள் நம்மை வேவு பார்த்தலைத் தடுக்க முடியுமென்பது திண்ணம். அன்றியும், வெளியூர்களிலுள்ள மக்கள் ஆங்கிலே யர்களிடத்தில் பணி புரியச் செல்வதையும் தடுக்

கலாம் என்பதும் உறுதி. எனவே, நீர் இவற்றிற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும்," என்று கேட்டுக்கொண்டது சிந்திக்கத் தக்கது.

போர்த் திட்டங்கள் எல்லாவற்றையும் கவர்னர் துய்ப்ளேக்ஸும், ஆனந்தரங்கப் பிள்ளையுமே வகுத்து வந்தார்கள் என்று சொல்வது மிகையாகாது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் துய்ப்ளேக்ஸ் ஞாயிறுபோலவும், ஆனந்தரங்கப் பிள்ளை அஞ்ஞாயிற்றின் ஒளி போலவும் காணப்பட்டார்கள். ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகளே இதனை வெளியிடுகின்றன.

கருநாடக வெற்றிக்குப் பிறகு துய்ப்ளேக்ஸ் நாட்டுப் பரிவர்த்தனை ஒன்று செய்தார்; அப்போது செங்கற்பட்டை ஆனந்தரங்கப் பிள்ளைக்குச் சொந்தமாக்கி, அச்சிறு பாக்கம், திண்டிவனம், திருவதிகை, புவனகிரி, திருத்தினை நகர், வேங்கடம்மா பேட்டை, தேவனாம்பட்டினம் ஆகிய ஊர்களை அவர் கண்காணிப்பில் விடுத்து, அவற்றைப் பரிபாலித்து வரும்படி செய்து, அவரை மேன்மைப்படுத்தியது குறிப்பிடத் தக்கது.



## 3. தொழிலூற்றம்

இந்திய மக்களின் தலைவராகிய ஆனந்தரங்கப் பிள்ளையின் பெயர் துய்ப்ளேக்ஸின் பெயரோடு சம்பந்தப்பட்டே சரித்திரத்தில் முதன்மை பெற்றிருக்கிறது. பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாரின் மத்தியஸ்தர் என்னும்

**பொது வாணிபம்**

முறையில் ஆனந்தரங்கப் பிள்ளை அக்கூட்டத்தின் வர்த்தகம் அனைத்தையும் தாமே முன்னின்று நடத்தி வந்தாரென்பதற்குச் சான்றுகள் பல உள. சரக்குகளின் உற்பத்தியையும், அவைகளைப் பண்டசாலைகளில் சேமித்து வைத்தலையும், பின்னர் அவைகளைப் பிரான்ஸ் தேசத்திற்கு ஏற்றுமதி செய்வதையும் அவர் நேரே இருந்து நடத்தி வந்திருக்கிறார். இப்படித் தம்மால் அனுப்பப்படும் சரக்கு மூட்டைகளின்மீது தம் பெயரைக் குறிக்கும் சின்னத்தையும் இட்டு வந்திருக்கிறாரென்பது தெரிய வருகிறது. பல மூட்டைகளின்மீது பிரெஞ்சு எழுத்தாகிய R. என்னும் எழுத்து இடப்பட்டுச் சரக்கு

கள் ஏற்றுமதி செய்யப்பட்டதைச் சரித்திர ஆராய்ச்சியாளர் கண்டு வரைந்திருக்கின்றனர்.

**நெசவும் துணி ஏற்றுமதியும்**

நாட்டில் நெய்யப்படும் துணிகளின் விலையை ஒரு கை தேர்ந்த வர்த்தகரைப்போல ஆனந்தரங்கப் பிள்ளை மிகச் சரியானபடி மதிப்பிட்டு வாங்கும் ஆற்றலைப் பெற்றிருந்தார். அப்படி வாங்கப் பெறும் ஜவுளித் தினுசுகள், சாதாரண மானவையாயினும், சலவை செய்யப்பட்டவையாயினும், அச்சிடப்பட்டவையாயினும், நீலந் தோய்க்கப்பட்டவையாயினும், அவற்றின் தரத்திற்குத் தக்கபடி ஆனந்தரங்கப் பிள்ளை பேரனுபவம் வாய்ந்தவராய், அவற்றைக் கிழக்கிந்திய கூட்டத்தாருக்காகக் கொள்முதல் செய்து அனுப்பி வந்தார். கிழக்கிந்திய கூட்டத்தாரின் வர்த்தகத்தில் அக்காலத்தில் முக்கியமாயிருந்தது ஜவுளித் தினுசுகளைப் புதுச்சேரியினின்று பிரான்ஸ் தேசத்திற்கு அனுப்புவதேயாம். புதுச்சேரியிலும் அதனைச் சேர்ந்த பல சிற்றூர்களிலும் கைத்தறி நெசவாளர் ஏராளமாய் இருந்து வந்தனர். அவர்களால் நெய்யப்படும் துணிகளையே கிழக்கிந்திய கூட்டத்தார் வாங்கி வந்தனர். நெசவாளர்களேயன்றிச் சாயம் தோய்ப்பவர்களும் பெருவாரியாக இப்பிரதேசத்தில் இருந்து வந்தமையால், சாயத்தொழிலும் நன்னிலையில் இருந்து வந்தது. துணிகளுக்கு அச்சுக் குத்துவோரும் அக்காலத்தில் இல்லாமலில்லை. பல விதப் பூக்கள், படர்கொடிகள் முதலிய அச்சுகள்

மிக அழகாகக் குத்தப்பெற்ற துணிகள் பிரான்ஸ் தேசத்திற்கு அனுப்பப்பட்டு, அங்கு அத்தேச மக்களால் மதித்துப்போற்றப்பட்டு வந்திருக்கின்றன. நெசவுத் தொழிலும் சாயத்தொழிலும் பிரெஞ்சுக்காரர்களின் நலத்திற்கு ஆதாரமாயிருந்தன. ஆகையால், புதுச்சேரிப் பிராந்தியங்களில் இன்றும் அவை ஓர் அளவு ஆங்காங்கு நிலைத்து வருகின்றன. புதுச்சேரிக்கு வெளியிலே பல கிராமங்களில் பெரிய சாயத் தொழிற்சாலைகள் இருந்தன என்பதைக் குறிக்குஞ் சில சின்னங்கள் இன்றும் காணப்படுகின்றன.

ஆனந்தரங்கப் பிள்ளை பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்காக் அனுப்பி வந்த துணிகள் பல வகைப்படும். பிரெஞ்சுக்காரர்களின் விருப்பத்திற்குத் தக்க விதமாக அவர் தம் நாட்டிலுள்ள நெசவாளர்களுக்குக் குறிப்புத் தந்து, அதன்படி துணிகளை நெய்யச் செய்வது வழக்கம். இங்ஙனம் நெய்யப்படும் துணிகள் பிரெஞ்சு மக்களால் மிகவும் பாராட்டப்பட்டிருக்கின்றன. லெகு தெ பிளேக்ஸ்[1] என்னும் அறிஞர் அவற்றைப் பற்றிக் குறிப்பிடும்போது அவை பிற துணிகளைப்பார்க்கிலும் மிக உயர்ந்தவை, நேர்த்தியானவை, கைத்திறம் பெரிதும் பெற்றவை என்று கூறியிருக்கிறார்.

பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தார் வாங்கி வந்த துணிகளை இரண்டு கூறுபடுத்தலாம் : ஒரு வகை வழுவழுப்பானவை; மற்றொரு வகை முரடா

1. Legoux de Fleix

னவை. பருத்தியினுலாய இவை 'மஸ்லின்' என்றும், 'சாதாரணத் துணி' என்றும் வழங்கப்பட்டன. புதுச்சேரிக்கு அண்மையில் அதன் மேற்குப் பாகத்தில் சிறந்த மஸ்லின் நெய்யப்பட்டு வந்தது. சாதாரணத் துணி என்பது நூலின் எண்ணிற்குத் தக்கவாறு மதிப்புடையதாயிற்று. நான்கு வித நூல்கள் அத்துணிக்குப் பயன்படுத்தப்பட்டன. சென்னையைச் சார்ந்த இடங்களிலும் இத்தகைய துணிகள் நெய்யப்பட்டு வந்தன. எனினும், புதுச்சேரியில் நெய்யப்பட்ட துணிகள் அவற்றைப் பார்க்கிலும் உயர்ந்தனவாயும், குறைந்த விலையுள்ளனவாயும் இருந்தன. ஆகவே, பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தார் புதுச்சேரித் துணிகளையே ஏராளமாக வாங்கினர்.

அவர்கள் வாங்கிய துணிகளை 1. வெள்ளைத் துணிகள், 2. நீலந்தோய்த்த துணிகள், 3. சாய நூற்களைக்கொண்டு நெய்த துணிகள், 4. அச்சுக் குத்திய துணிகள் எனவும் வகைப்படுத்தலாம். புதுச்சேரியில் நெய்யப்பெற்ற வெள்ளைத் துணிகள் 'தென்னுட்டுத் துணிகள்' என வழங்கப்பட்டன. நீலந்தோய்த்த துணிகள், பெரும்பாலும் பரங்கிப்பேட்டையில் நெய்யப்பட்டவை. ஆனந்தரங்கப் பிள்ளை தமது வர்த்தகத்தைத் தொடங்கும்பொழுது இத்துணிகளைத்தான் பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்குக் கொடுத்து வந்தார்.

சாய நூற்களைக்கொண்டு சென்னையில் ஒரு வகைக் கைத்துண்டுகள் நெய்யப்பட்டன. அவை வெளி நாட்டாரால் பெரிதும் விரும்பி வாங்கப்பட்டன. அவற்றிற்குச் 'சென்னைக் கைத்துண்டு'

என்னும் காரணப் பெயரையே மேனாட்டார் வழங்கினர். துணியின் மென்மையும் சாயத்தின் அருமையுந்தான் அந்நாட்டார்களுக்கு அக்கைத் துண்டின்பால் மிக்க விருப்பத்தை எழுப்பின. அரச குடும்பங்களில்கூட அக்கைத் துண்டுகள் விரும்பி உபயோகிக்கப்பட்டன. கி. பி. 1762-ஆம் ஆண்டு 'புய்சி'[1] என்பவர், ஐரோப்பாவிற்குச் சென்றபோது அந்தக் கைத்துண்டுகளில் நாற்பத்தெட்டைப் 'போம்பாதூர்'[2] அம்மையாருக்கு ஒரு தங்கப் பெட்டியில் வைத்துப் பரிசாகத் தந்த செய்தி அறியத் தக்கது.

சாயந் தோய்த்த நூற்களால் நெய்த இன்னொரு வகைத் துணியும் உண்டு. அது 'சைலாசு'[3] என்று வழங்கப்பட்டது. நீளத்திலும் அகலத்திலும் இடையிடையே பலநிற நூற்களைச் செலுத்தி மெல்லிதாக நெய்யப்படும் துணியே 'சைலாசு' என்பது.

அச்சுக் குத்திய துணிகள் சென்னை, காஞ்சிபுரம் முதலிய இடங்களினின்றும், புதுச்சேரியினின்றும் அனுப்பப்பட்டன. சென்னை, காஞ்சிபுரம் முதலிய இடங்களின் அச்சுத் துணிகள் அக்காலையில் மசூலிப்பட்டினத்தில் நெய்யப்பட்ட அச்சுத் துணிகளைப்பார்க்கிலும், மிக உயர்ந்தவையாயிருந்தன. புதுச்சேரியில் உற்பத்தி செய்யப்பட்ட அச்சுத் துணிகள், பெரும்பாலும் கட்டில்களுக்கு மேல் விரிப்புகளாகவே பயன்பட்டன. புதுச்சேரிப் பக்கங்களில் கிடைத்த இவ்வச்சுத்

---

1. Bussy 2. Mme. de Pompadour

3. இச்சைலாசு இன்னும் புதுச்சேரியில் நெய்யப்பட்டு வருகின்றது.

துணிகள் எட்டடி நீளம் உள்ளவை. இவைகளும் பெருவாரியாகப் புதுச்சேரியினின்றும் ஏற்றுமதி செய்யப்பெற்றன. மோரீஸ்[1] தீவிலிருந்த மக்களே மற்ற நாட்டினரைக்காட்டிலும் மிகுதியாக இவற்றை வாங்கி வந்தார்கள். ஆனந்தரங்கப் பிள்ளை தம் நாட்குறிப்புகளில் மோரீஸ் கவர்னர் தாவீது[2] என்பார் கட்டில் விரிப்புகளைத் தமக்கு அனுப்பும்படி கேட்டிருந்த செய்தியையும், அவர் நெசவாளர்களுக்கு அது குறித்து இட்டிருந்த கட்டளைகளையும் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

கடல் வாணிபம்

ஆனந்தரங்கப் பிள்ளையின் வர்த்தக வேலை உள் நாட்டோடு மாத்திரம் அமையவில்லை. அவர் புதுச்சேரிக்குப் புறம்பேயுள்ள ஊர்களிலிருந்து பொருள்களின் உற்பத்தியையும், தரை மார்க்கமாக அவைகளின் போக்கு வரவுகளையும் தாம் நேரே கவனித்துக்கொண்டு வந்ததுமன்றி, பல வகைப்பட்ட வாணிபப் பொருள்களைக் கடல் மார்க்கமாகவும் அயல்நாடுகளுக்கு அனுப்பி, அம்முறையிலும் தம் வாணிபத்தைப் பெருக்கி வந்தார். இதற்கென அவர் தமது சொந்தத்தில் 'ஆனந்தப் புரவி' என்னும் பெயரிய கப்பல் ஒன்றை வைத்திருந்ததாகத் தெரிகிறது. இந்த ஆனந்தப் புரவி, ஆனந்தரங்கப் பிள்ளை எழுதி வைத்திருக்கும் தினக் குறிப்புகளில் பல முறை குறிப்பிடப்பட்டிருக்கிறது.

1. Maurice 2. David

அக்காலையில் மோரீஸ் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமாயிருந்தது; பின்பு கி.பி. 1810-ஆம் ஆண்டு முதல் ஆங்கிலேயருக்குச் சொந்தமாயிற்று.

வர்த்தகமே பெருநோக்காகக் கொண்டு இந்திய நாட்டிற்கு வந்த பிரெஞ்சுக்காரர்களுக்கு அத்துறையில் ஆனந்தரங்கப் பிள்ளை பெரிதும் உழைத்து, அவர்களுக்கும் நாட்டு மக்களுக்கும் நல்ல பயனைத் தேடி வந்தார்.

**கணக்குப் புத்தகம்** இத்தகைய தன்மை வாய்ந்த அப்பெரியார், வர்த்தக சம்பந்தமாக வேண்டிய கணக்குப் புத்தகங்கள்முதலியவற்றை வைத்தும், அல்லது பிறரை வைக்கச் செய்தும் இருத்தல் வேண்டும். அவர் நடத்திய சாயத் தொழிற்சாலை, பாக்குக் கிடங்கு முதலியவற்றின் கணக்குப் புத்தகங்கள் என்னுயின என்பதை அறிவதற்கியலவில்லை. அவை கிடைத்திருக்குமாயின், அந்நாளில் நாட்டில் எத்தகைய வியாபாரம் நடந்து வந்ததென்பதையும், கைத்தொழில்கள் என்ன நிலைமையில் இருந்தனவென்பதையும் எளிதில் அறிந்துகொள்ளல் இயலும். ஏதோ ஒவ்வொரு வகையில் சிறிதளவு அக்காலத்தில் வர்த்தகம் இருந்த நிலைமையை ஆனந்தரங்கப் பிள்ளையின் தினக் குறிப்புகள் இலை மறை காய்போலக் காட்டுகின்றனவென்றாலும், அவ்வர்த்தகத்தைச் சரிவர அறிந்துகொள்ள அவைகள் சிறிதும் போதுமானவைகளாயில்லை.

இஃதிங்ஙனமாக, ஆனந்தரங்கப் பிள்ளை நகைகளின்மீது கடன்கள் சில கொடுத்தது பற்றியும், கிழக்கிந்திய கூட்டத்தாரிடமிருந்து சிற்சில காரியங்களுக்கு முன் பணமாகப் பெற்ற தொகைகளைப் பற்றியும் ஒருவாறு அறிய இயல்கிறது.

புதுச்சேரிக் கலோனியல் கல்லூரி[1] என்னும் பிரெஞ்சு கலாசாலை ஆசிரியரும், சிலாசாசனப் பரிசோதகருமான திரு. துய்ப்ரேய்[2] என்பவர், கி. பி. 1928-ஆம் ஆண்டில் ஆனந்தரங்கப் பிள்ளையின் சொந்த இல்லத்திலே, அவர் சந்ததியார் துணை கொண்டு புத்தகம் ஒன்று கண்டெடுத்தார். அப்புத்தகம் ஒரு கணக்குப் புத்தகம். அதில் ஞாபகக் குறிப்பாக எழுதப்படுவது போலச் சில கொடுக்கல் வாங்கல்கள் மையினுல் எழுதப்பட்டிருக்கின்றன. அக்கொடுக்கல் வாங்கல்கள் ஒன்றன்பின் ஒன்று தீர்ந்துவிடுங்கால், அவற்றை நீக்கி விடுவது போல ஒவ்வொரு குறிப்பின் மேலும் மைக்கோடு ஒன்று குறுக்கே இழுக்கப்பட்டிருக்கிறது. அக்குறிப்புகள் தமிழ்மொழியில் சாதாரண நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளை ஆனந்தரங்கப் பிள்ளை தம் கையினுலேயே எழுதினுரோ, அல்லது தம் சிப்பந்திகளில் ஒருவரைக் கொண்டு எழுதுவித்தாரோ தெரியவில்லை. இப் புத்தகத்தில் காணும் குறிப்புகள் சரித்திரத்திற்கு நெருங்கிய சம்பந்தம் உடையன அல்லவாயினும், அரசியற்றுறையில் அக்காலத்தில் ஈடுபட்டிருந்த பலரது பொருளாதார நிலைமையையும், அவர்கள் மேற்கொண்ட தொழில்களின் மேன்மையையும் ஒரு சிறிது விளக்காமலில்லை. திரு. துய்ப்ரேய் அவர்களால் கண்டெடுக்கப்பட்ட இந்தக் கணக்குப் புத்தகத்தைப்பற்றி இதற்குமுன் எவ்விதச் செய்தியும் வெளி வந்ததில்லை. இதனைப் புதுச்சேரிப்

1. College Colonial 2. J. Dubreuil

பிரெஞ்சிந்திய சரித்திர ஆராய்ச்சிச் சங்கத்தார்[1] பிரெஞ்சில் மொழி பெயர்த்து, கி. பி. 1930-ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினர். இதன் மூலப்பிரதி புதுச்சேரி அரசாங்கப் புத்தக சாலையில் வைக்கப் பட்டிருக்கிறது.

1. Societe de l' Histoire de l'Inde francaise



## 4. கல்வித்திறம்

ஆனந்தரங்கப் பிள்ளை பல மொழிகளைக் கற்றிருந்தார். தாய் மொழியாகிய தமிழ் மொழியில் அவருக்கு மிகுந்த பற்று உண்டு. ஆகையால், அவர் தமிழ்ப் புலவர்களைப் புரக்கும் தன்மை உடையராயிருந்தார். புலவர் பலர் ஆனந்தரங்கப் பிள்ளையின் அவையை அடைந்து, பாக்கள் பல பாடிப் பரிசுகள் பல பெற்றிருக்கின்றனர். வறுமையால் வருந்திய புலவர் பலர், ஆனந்தரங்கப் பிள்ளையின் வள்ளன்மையினால் தமது வறுமை நீங்கப்பெற்று, இன்புறுவாராயினர். புலவர்கள், பிள்ளை அவர்களின் குண நலங்களைப் பாராட்டிப் பாடுவதுமுண்டு; அல்லது தாங்கள் இயற்றிய புது நூல்களை அவர்தம் அவையிலே அரங்கேற்றுவதும் உண்டு. புகழ்ப்பாக்கள் ஆங்காங்குச் சிதறிப் போயின. அவற்றுள் ஒரு சில தனிப்பாடற்றிரட்டில் காணப்படுகின்றன. அரங்கேற்றுதல் செய்யப்

புலவர்கள் புகழுரை

பெற்ற நூல்கள் இன்னவை என்பது அறிவதற்கில்லை. ஆனால், அருணாசலக் கவிராயர் இயற்றிய இராம நாடகத்தைத் திருவரங்கத்தில் அரங்கநாதர் சந்நதியில் அரங்கேற்றம் செய்தபின், அதனை ஆனந்தரங்கப் பிள்ளை சமுகத்தில் அரங்கேற்றினர் என்பது அருணாசலக் கவிராயர் சரித்திரத்தில் காணப்படுகிறது.

தனிப் பாடல்கள் ஒரு புறமிருக்க, ஆனந்தரங்கப் பிள்ளையைப்பற்றிச் செய்யுள் நூலொன்று புலவரொருவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. இந்நூலுக்கு 'ஆனந்தரங்கக் கோவை' என்பது பெயர். இந்நூல் இன்றும் ஓலைச் சுவடியாய் இருக்கிறதேயன்றி, அச்சியற்றப் பெற்றுப் புத்தக வடிவில் வெளி வரவில்லை. இதனை இயற்றியவர் இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகர் புதல்வர் சதாசிவ தேசிகர் ஆவர்.

இக்கோவையேயன்றி வேறொரு கோவையும் இருப்பதாகத் தெரிகிறது. அதனை இயற்றியவர் தியாகராயப் புலவர். இச்செய்தியை அடியிற் காணும் நந்தமண்டல சதகச் செய்யுள் நவில்கிறது:

" விசாகரைப் போலத் தமிழ்சொற்
றியாகர் விளம்பியசத்
தசாகர மான பொருட்கோவை
கொண்டுசத் தாங்கநல்கி
நிசாகரன் வெண்ணில வொப்பப்
புகழை நிலைநிறுத்தும்
வசாரத வானந்த ரங்கனும்
வாழ்நந்த மண்டலமே.

கஸ்தூரி ரங்கய்யர் என்னும் கவிஞர் ஒருவர், ஆனந்தரங்கப் பிள்ளைமீது 'ஆனந்தரங்க ராட் சந்தமு' என்னும் தெலுங்கு நூல் ஒன்று இயற்றியிருக்கின்றார். பண்ணோடு பாடக்கூடிய பாக்கள் அதில் அடங்கியிருக்கின்றமையினால், நடன மாதர் பலர்க்கு அவை பாடக் கற்பிக்கப்பட்டன. கி. பி. 1746-ஆம் ஆண்டில் ஆனந்தரங்கப் பிள்ளையின் அவையில் அந்நூல் அரங்கேற்றஞ் செய்யப் பெற்று, நடன மகளிர் அப்பாட்டுகளைப் பாடி நடனம் புரிந்து ஆனந்தரங்கப் பிள்ளையையும் அவையினரையும் அகமகிழச் செய்தனர்.

'ஆனந்தரங்க விஜயம்' என்னும் நூலொன்றைச் சீனிவாச கவி என்பார், கி. பி. 1752-ஆம் ஆண்டில் இயற்றியதாகத் தெரிகிறது. புலவர்களைப் புரக்கும் தன்மை வாய்ந்த ஆனந்தரங்கப் பிள்ளை, அப்புலவர்களின் புலமைக்கும் எளிமைக்கும் ஏற்றவாறு பொருள்களை ஈந்து, அவர்களை இன்புறச் செய்து அனுப்பி வைப்பது தம் கடனெனக் கொண்டார், பரிசு பெறுவான் வேண்டியே புலவர் பலர் அவர் மாளிகைக்கு வருவதுண்டு. வறுமையினால் வாடித் துன்புற்ற புலவரொருவர், தம் வறுமையைப் போக்கிக்கொள்ள ஆனந்தரங்கப் பிள்ளையை நினைந்து, அவர் வாழ்ந்த புதுச்சேரியை நோக்கிப் புறப்பட்டார். அப்போது அவருக்கு நன்னிமித்தங்கள் பல தோன்றின. அந்நிமித்தங்களைக் கண்ணுற்ற போதே, "நம்மிடிக்கு மருந்து கண்டோம்!" என்று இன்புற்று, ஆனந்தரங்கப்

**புலவரைப் புரத்தல்**

பிள்ளையின்பால் தாம் கொண்டிருந்த நன்மதிப்பை மேலும் பெருக்கிக்கொண்டவராய், விரைந்து நடக்கலாயினர். அவர் புதுச்சேரியை அணுகிய போது அவருள்ளத்திலே ஆனந்தம் ததும்பி வழிந்தது. பின்னர் அவர் ஆனந்தரங்கப் பிள்ளையின் மாளிகையினுட்சென்று அவரைக் கண்டதும், தாம் வேண்டி வந்த பொருளனைத்தும் கிடைத்துவிட்டதைப்போலப் பெருமகிழ்வுற்று அவரைக் குறித்துப் பின்வரும் பாடலைப் பாடினர்:

"உலங்கொண்ட மணிப்புயனே! பிரம்பூரா
னந்தரங்கா! உன்பாற் செல்ல,
வலங்கொண்ட கருடனையாம் இடங்கண்டோம்;
எழில்நரையான் வலத்தே கண்டோம்;
பொலங்கொண்ட மணிமாட மீமிசையிற்
புயல்தவழும் புதுவை யென்னும்,
தலங்கண்டோம்; நினதுநகை முகங்கண்டோம்;
இனிவேண்டுந் தனங்கண் டோமே."

இங்ஙனம் பாடிய புலவரின் பெயர் மதுர கவிராயர் என்பது. அவர், முகத்தைக் கொண்டு அகத்தை அளந்தறியும் ஆற்றல் பெரிதும் படைத்திருந்தாரென்பது அவர்தம் பாட்டினுல் அறியப் படுகிறது. ஆனந்தரங்கப் பிள்ளையின் முகத்தை நோக்கிய மாத்திரத்திலேயே அவர் தமக்கு வேண்டும் பொருளைத் தந்து தமது வறுமையைப் போக்கிவிடுவார் என்னும் உறுதி ஏற்பட்டு, அவர் ஓவியக்காரன் சித்திரிப்பது போலத் தம் கவியினுல் பிள்ளையவர்களைச் சித்திரித்துக் காட்டுகிருர். "நினது நகை முகம் கண்டோம்; இனி வேண்டும் தனம் கண்டோமே,"

என்னும் சொற்றொடர் எவ்வளவு அழகாய் அமைந்திருக்கிறதென்பதையும், அஃது ஆனந்த ரங்கப் பிள்ளையின் உருவத்தையும் உள்ளத்தை யும் எவ்வளவு தெளிவாக எடுத்துக் காட்டுகிற தென்பதையும் அறிதல் வேண்டும்! 'நகைமுகம்' என்றதனால், ஆனந்தரங்கப் பிள்ளை புலவர்களிடத் திற்போலவே மற்றெவரிடத்தும் குளிர்ந்த நோக் கும் புன்னகையும் உடையவரென்பதும், இன் சொல் கூறி இன்பந் தருபவரென்பதும் இனிது விளங்கும்.

மற்றொரு புலவர் வறுமையின் கொடுமைக் குட்பட்டு ஆனந்தரங்கப் பிள்ளையை அடைந்து சிறிது பொருள் கொணர்ந்து தம்மை வாட்டும் அவ்வறுமையை ஒருவாறு போக்கிக்கொள்ளலா மென்றெண்ணி, அவரிருக்குமிடத்தை நோக்கிச் சென்றனர். அப்போது பிள்ளையவர்கள் தம் வீட்டைவிட்டு வயற்புறத்திற்குச் சென்றிருந்தார். புலவர் அவரை விரைவிற் காணவேண்டுமென்ற ஆவல் மிகுதியினால் அவர் சென்றிருந்த வயற் புறத்திற்குத் தாமும் போயினர்; அங்கு ஆனந்த ரங்கப் பிள்ளை அறுவடையான நன்செய் நிலத்தில் சிதறிக் கிடந்த நெற்களை ஒவ்வொன்றாகப் பொ றுக்கிக்கொண்டிருந்ததைக் கண்டார்; அந்நிலை யில் அவரைச் சாமானியராகக் கருதித் தாம் வந்த நோக்கத்தைப் பற்றி அவரிடத்தில் விளம்பினார். அவர் அதனைச் செவியுற்று, தாம் மேற்கொண்ட வேலையினின்றும் நீங்காதவராய், அதைத் தொடர்ந்து செய்துகொண்டேயிருந் தார். நாழிகை ஆக ஆகப் புலவருக்கு மனத்தில்

ஒரு வித வெறுப்பு உண்டாயிற்று. அன்றியும், அவரைப் பசியும் வந்து பற்றிற்று. பசிப் பிணி என்னதான் செய்யாது! புலவர் தம் பொறுமையை இழந்து, ஆனந்தரங்கப் பிள்ளையிடம் தம் குறைகளை மீண்டும் மீண்டும் கூறலாயினர். அதைக் கேட்ட பிள்ளை அவர்கள், புலவரை நோக்கி, "ஏன் பறக்கிறீர்! சற்றுப் பொறுத்தல் கூடாதோ?" என்று வினவினர். புலவர் அறிவுடையவராதலால், அதற்கு விடையாக உடனே பின் வரும் செய்யுளைப் பாடினர்:

"கொக்குப் பறக்கும்; புறாப்பறக்கும்;
குருவி பறக்கும்; குயில்பறக்கும்;
நக்குப் பொறுக்கி களும்பறப்பர்;
நானேன் பறப்பேன் நராதிபனே!
திக்கு விசயஞ் செலுத்தியுயர்
செங்கோல் நடாத்தும் அரங்கா!நின்
பக்கம் இருக்க ஒருநாளும்
பறவேன்! பறவேன்! பறவேனே!"

இதைக் கேட்ட ஆனந்தரங்கப் பிள்ளை, புலவரின் புலமைக்கு வியந்து, தாம் செய்துகொண்டிருந்த வேலையின் சிறப்பையும் நுண்மையையும் அவர் அறியாது போனதுபற்றி மனத்தகத்தே வருந்தி, அவற்றை அவருக்கு அறிவித்தல் வேண்டுமென்றெண்ணி, உடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, புலவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு தமதில்லம் வந்தடைந்தார். அவர் தம் ஏவலாளர்களை அழைத்துப் புலவருக்கு உணவு படைத்தற்கென இலை முதலியன சித்தஞ் செய்யக் கட்டளையிட்டார். அவ்வாறே இருக்கையும்

இலையும் இடப்பட்டன. புலவரும் இலையின் முன்னிருந்த இருக்கையில் அமர்ந்தார். ஆனந்த ரங்கப் பிள்ளை தம் அறையினுட் சென்று, ஒரு தட்டு நிறையத் தங்கக் காசுகளை வாரிக்கொண்டு வந்து புலவரின் இலையில் கொட்டினர். புலவர் வியப்புற்று, அசைவற்று, திகைக்க லாயினர். புலவரின் வியப்பைக் கண்ட ஆனந்த ரங்கப் பிள்ளை, "புலவீர், ஏன் சும்மா இருக்கின் றீர்? இலையிலிட்டதை இன்பத்தோடு உண்ண லாமே! பசித்திருக்கும் நீவிர் அதனை வீணே பார்த் திருப்பதிற் பயனென்ன? பசியார உண்ணும்," என்று இயம்பினர். இம்மொழிகளைக் கேட்ட புல வர், ஒன்றும் அறியாராய், மேலும் திகைப்புக் கொண்டு, மறு மாற்றம் எதுவும் கூறாமல், வாயடைத்தவரைப்போல வறிதே இருந்தார். ஆனந்தரங்கப் பிள்ளை பின்னும் புலவரை நோக்கி, "கவிவாணரே, நான் சடுதியில் வரவில்லை என்று கவலையுற்றீரே! நான் வயற்புறத்தில் செய்து கொண்டிருந்த வேலையின் கருத்தை அறியாது போனீரே! அங்கு நான் பொறுக்கிக்கொண்டிருந்த நெல் மணிகள் உமது பசியை ஆற்ற வல்லனவா, அல்லது இப்பொற்காசுகள் அப்பசியைப் போக்க வல்லனவா என்று பகுத்துணராது போனீரே! பொன்னைக் குவியல் குவியலாக வைத்திருப்பினும், அதனால் இதுபோது பயனென்ன? அங்கு நான் பொறுக்கிக்கொண்டிருந்த நெற்களல்லவோ இங்கு வந்து சோறாகச் சமைக்கப்பட்டு உங்கட்கு உதவ வேண்டும்? இதையறியாது நீவிர் அவசரப்பட்ட மைக்கு நான் வருந்துகிறேனில்லை. நெல்லுக்கும்

பொன்னுக்கும் உள்ள உயர்வை இப்போது உணர்ந்துகொண்ட உங்கட்குச் சோறு படைக்கச் செய்கின்றேன்," என்று பகர்ந்தார்; பின்னர்த் தம் ஆட்களை அழைத்துப் பொன் நிறைந்த இலையை இழுத்துப் பக்கத்தில் வைக்கச் செய்து, வேறோர் இலையைப் போட்டு அறுசுவை உண்டியைப் புலவர் அருந்தும்படி செய்தார்.

புலவர் உண்ட பின் ஆனந்தரங்கப் பிள்ளை முன் இலையில் இட்ட பொற்காசுகள் அனைத்தையும் அப்படியே வாரிப் புலவர் கையிற் கொடுத்து, "அறிஞரே, இதனை நீவிர் அகமகிழ்ந்து பரிசாகப் பெற்றுச் செல்வீராக!" என்று வேண்டினர். புலவர் அதனை ஏற்றுப் பெருமகிழ்வுற்று, ஆனந்தரங்கப் பிள்ளையின் குண நலங்களைப் பெரிதும் வியந்து தம் ஊர் திரும்பினர். அப்புலவரின் பெயர் இராம கவிராயர் என்பது.

ஆனந்தரங்கப் பிள்ளை, புலவர்களை எத்துணை போற்றி வந்தாரென்பதும், அவர்கட்கு அவர் செய்து வந்துள்ள கொடை நலங்கள் எவ்வளவு சிறப்பு வாய்ந்தனவென்பதும், சவ்வாதுப் புலவர் பாடிய அடியிற்காணும் பாட்டினால் நனி விளங்கும்:

"பானுகிர ணம்பார்க்கும் பங்கே ருகம்;நிலவு
தானும்வரப் பார்க்குஞ் சகோரங்கள்;—வானமரும்
மையைப்பார்க் கும்மயில்கள்; மாவிசயா னந்தரங்கன்
கையைப்பார்க் கும்புலவோர் கண்."

ஆனந்தரங்கப் பிள்ளையின் புகழுக்கு இன்னொரு சான்று கூறுவோம்: ஒரு நாள்

(26-11-1749) ஆனந்தரங்கப் பிள்ளை திருவேங்கட புரச் சத்திரத்திற்குச் சென்றுகொண்டிருந்தார். அவர் பொம்மையபாளையம் அணுகிய பொழுது எதிரில் சென்னைச் சித்துக்காட்டுச் சின்னத்தம்பி முதலியார், தம் பல்லக்குப் பின்னே வரத் தாம் முன்னே நடந்து வந்துகொண்டிருந்தார். இதனை ஆனந்தரங்கப் பிள்ளை கண்ணுற்றார். அவ்வள விலே சின்னத்தம்பி முதலியார், அவரை நோக்கி இரு கரங்களையும் தலைக்குமேல் கூப்பி,

"தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

என்னும் திருக்குறள் வெண்பாவைக் கூறி, "பிள்ளை அவர்களே, நீங்கள் இவ்வெண்பாவுக்கு இலக்கியமாய் இருக்கிறீர்கள். உங்கள் பிறப்பே பிறப்பு! டில்லி பாட்சாவும், மற்றப் பெரிய பிர முகர்களும் உங்கள் பெயரைக் கேட்டுப் பேரு வகை கொள்கின்றார்கள். தமிழர்களிலே நீங்கள் தலைசிறந்து விளங்குகிறீர்கள். இவ்வளவு பெரிய புகழைவிட ஒருவன் விரும்பக்கூடியது வேறு என்ன உளது?" என்று அவரைப் பாராட்டினார்.

ஆனந்தரங்கப் பிள்ளை, "பெரியீர், நீங்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள். திருவள்ளுவர் திருக் குறள் வெண்பா ஆயிரத்து முந்நூற்று முப்பதை யும் மனப்பாடமாகச் சொல்வீர்கள் என்று கேள்வி யுற்றிருக்கின்றேன். அன்றியும், அவற்றின் உண் மைகளை அனுபவ வாயிலாக அறிந்து விரித்துரைக் கும் சக்தி வாய்ந்தவர்களென்றும், சினத்தை வென்று பொறுமையை மேற்கொண்டவர்கள்

என்றும், படித்தவர்களால் போற்றப்படுபவர்களென்றும் பலர் சொல்ல யான் கேட்டிருக்கிறேன். உங்களைப்பார்க்க வேண்டுமென்று யான் பல நாள் எண்ணினதுண்டு. இன்று யான் உங்களைக் கண்டதனால் என்னுடைய நெடுநாளைய விருப்பம் தணிந்தது. நீங்கள் எனதில்லத்திற்கெழுந்தருளிச் சிறிது நேரம் என்னோடு அளவளாவிப் போக வேண்டும்," என்று கூறினார்.

**பன்மொழிப்பயிற்சி**

ஆனந்தரங்கப் பிள்ளை பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்குத் துவிபாஷியாராயிருந்து வந்தமையினால், அவருக்குத் தம் தாய் மொழியாகிய தமிழ் மொழியோடு பிரெஞ்சு மொழியும் நன்கு தெரிந்திருந்ததென்பது தெள்ளெனத் தெரிகிறது. இவ்விரண்டுமொழிகளல்லாமலும் அவருக்குத் தெலுங்கு பாஷையிலும் போதிய ஞானம் இருந்தது புலனாகிறது. மலையாள மொழியையும் அவர் அறிந்திருந்தாரென்பதற்குச் சான்றுகள் சில உள. போர்த்துகல் மொழியிலும் அவருக்குச் சிறிது பயிற்சி உண்டு. அவர் காலத்தில் இந்தியாவில் அரசு புரிந்து வந்த வடநாட்டு மன்னர் பலரோடு அவர் உறவுகொண்டிருந்தமையினால், அவர்களோடு கடிதப் போக்கு வரவு செய்துகொள்ளவும், அவர்களைக் காணுங்கால் ஒருவர்க்கொருவர் எண்ணங்களை வெளியிட்டு அறிந்துகொள்ளவும் அவருக்கு இந்துஸ்தானி, பார்சி, மராத்தி முதலிய பாஷைகள் பேசுபவர்களின் உதவி வேண்டியிருந்தது. அதற்காக அவர் மேற்கண்ட மொழிகளில் வல்லுநராயும், தமிழ் அறிந்தவராயும் உள்ள சில

ரைச் சம்பளம் கொடுத்துத் தம்மிடத்தில் வைத் திருந்ததாகவும் தெரிகிறது. வேற்று மன்னர்களிட மிருந்து தமக்கோ அல்லது பிரெஞ்சு கவர்னருக் கோ வரும் நிருபங்களுக்கு ஏற்ற வண்ணம் பதில் எழுதும் முறையை அவர் தாமே மேற்கொண்டு வந்தார்.

ஆனநதரங்கப் பிள்ளை வான நூலிலும் சோதி டக் கலையிலும் தேர்ச்சியுடையவராயிருந்தார் என்பது தெரிகிறது. அவருடைய நாட்குறிப்பு களில் மேக மண்டலத்தில் தோன்றும் விசேடக் காட்சிகளும், சோதிடம் பற்றிய செய்திகளும் பல முறை வரையப்பட்டிருக்கின்றன.

சோதிடக் கலை

கோள்களின் நிலையையும், அவற்றால் நாட்டுக்கு நேரக் கூடிய நன்மை தீமைகளையும் அவர் ஆங் காங்கு எடுத்தோதியிருக்கிறார்; பலருடைய ஜாத கங்களின் பலனைப்பற்றியும் பன்முறை பகர்ந்திருக் கிறார். அவர் சோதிட நூலை ஆராய்ந்து சொன்ன எதிர்கால சம்பவங்களெல்லாம் அப்படியே நிகழ்ந் திருக்கின்றன என்பதற்குச் சான்றுகள் பல உள. அவற்றில் ஒன்றைக் கீழே குறிப்பிடுகிறோம் :

புதுச்சேரி நகரம் ஆங்கிலேயர்களால் முற்றுகையிடப்பட்டிருந்தபோது துய்ப்ளேக்ஸ் அம் முற்றுகை சம்பந்தமாக ஆனந்தரங்கப் பிள்ளை யிடத்தில் சோதிடங் கேட்டார். அதற்குப் பிள்ளை அவர்கள், சோதிட நூலை ஆராய்ந்து, (1748) ஐப் பசி முதல் தேதியில் ஆங்கிலேயர் புறமுதுகிட்டுச் செல்லுவர் என மொழிந்தார். அவர் சொன்ன தேதியை மறந்து ஒரு நாள் முன்னதாகத் துய்ப்

ளேக்ஸ் அவரை அழைத்து, "முற்றுகை இன்னும் நீடித்திருப்பதேன் ?" என வினவினர். அதற்கு ஆனந்தரங்கப் பிள்ளை தாம் சொன்ன நாள் அன்றைக்கு அடுத்த நாள் என்றும், அன்று ஆங்கிலேயர் அகன்றுவிடுவதிற் சந்தேகமில்லை என்றும் கூறினர். அதன்படியே மறு நாள் ஆங்கிலேயர், 42 தினமாகப் புதுச்சேரியை முற்றுகையிட்டும் வெற்றி பெறுமல் துய்ப்ளேக்ஸின் சேனைகளினல் அடித்துத் துரத்தப்பட்டனர். இச்செய்தி ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகளில் காணப்படுகிறது.



## 5. செல்வச் சிறப்பு

**செல்வத் தொடக்கம்**

ஆனந்தரங்கப் பிள்ளை புதுச்சேரியில் பெருஞ் செல்வராய்த் திகழ்ந்தார். அவர் தந்தையார் புதுச் சேரிக்குக் குடியேறிப்பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாரின் நன்மதிப்பைப் பெற்று, அக் கூட்டத்தாரின் திவானாய் அமர்ந்து பணியாற்றி வந்தமுறையில் ஓரளவு பொருள் ஈட்டினார்; திரு வேங்கடபுரம் என்னும் தம் பெயர் கொண்ட சிற்றூரைத் தமக்குச் சொந்தமாக வாங்கி, அங்குப் பொது மக்கள் நலம் கருதிச் சத்திரம் ஒன்று கட்டுவித்தார். அவருக்குப் பின் ஆனந்தரங்கப் பிள்ளை சிறந்த பதவியை எய்தி, தம் தந்தையார் வைத்துச் சென்ற பொருள்களைக்காட்டிலும் பெருவாரியான செல்வங்களைத் திரட்டினார்.

தம் தந்தையார் காலமாயின பின் ஆனந்தரங் கப் பிள்ளை ஏதேனும் ஒரு தொழிலில் ஈடுபட

வேண்டுமென்னும் அவா மேலீட்டிஞல், தம் இல்லத்துக்கருகில் ஒரு விடுதியில் பாக்குவர்த்தகத்தைத்தொடங்கிஞர். பாக்குகளே அவர் மிகுதியாக விற்றுவந்ததால், அவர் விடுதி சிறப்புவாய்ந்ததாயிற்று. அவ்விடுதி 'பாக்குக் கிடங்கு' என வழங்கப்பட்டது. அப்பாக்குக் கிடங்கைப்பற்றிப் பல முறை ஆனந்தரங்கப் பிள்ளே தம் நாட்குறிப்புகளில் வரைந்துள்ளார்.

பாக்குக் கிடங்கு

பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்குத் துணிகளேக் கொடுத்து வந்த வகையிலும், புதுச்சேரியைச் சூழ்ந்த பல கிராமங்களிலும் சாயத் தொழிற்கூடங்கள் வைத்து நடத்திவந்த வகையிலும் அவருக்குப் பெரும் பொருள் கிடைத்தது. சாயத்தொழிற்கூடங்களில் சிறந்ததாயிருந்தது பரங்கிப்பேட்டைத் தொழிற்கூடமே. சாய வேலையை ஆனந்தரங்கப் பிள்ளே பரங்கிப்பேட்டையிலேதான் முதல் முதல் தொடங்கிஞர். பரங்கிப் பேட்டைத் தொழிற்கூடத்தினின்று அவர் பெற்ற ஊதியம் மிகப் பெரிது. பதிஞயிரம் ரூபாய், இருபதிஞயிரம் ரூபாய்க் கணக்கில் அங்குத் தொழில் நடத்தப்பட்டு வந்தது. புதுச்சேரிக்கு அண்மையிலிருந்த தொழிற்சாலேகளும் அவருக்குத் தகுந்த வருவாயைத் தந்து வந்தன. வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட துணிகளில் சில, சலவை செய்து அனுப்பப்பட்டன. அதற்கெனப் புதுச்சேரிக்கு வடபாகத்தில் சலவைச் சாலே ஒன்றும்

சாய சலவைக் கூடங்கள்

இருந்தது. அஃது ஆனந்தரங்கப் பிள்ளைக்குரியது. அந்தச்சாலையில் பலர் தொழில் புரிந்து வந்தனர். ஆனந்தரங்கப் பிள்ளையே அங்கு வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வேண்டும் பொருள்களையும், அவர்களின் கூலியையும் கொடுத்து வந்தார். அத் தொழிற்சாலை மிகவும் பெரியதாயிருந்தது. ஒரு சமயம் 'தொத்தேய்'[1] என்பார், நாஸர்ஜங் கோடு[2] போர் புரிந்தபோது சோர்வுற்ற தம் சேனைகளை அத்தொழிற்சாலையில் தங்கச் செய்தனராம். அச்சலவைத் தொழிற்சாலையும் ஆனந்தரங்கப் பிள்ளையின் வருமானத்திற்கு ஒரு சாதனமாய் இருந்து வந்தது.

நெசவுச் சாலை

அவர் ஆர்க்காட்டுக்கண்மையிலுள்ள லாலா பேட்டையில் தம் பொறுப்பில் பெரிய நெசவுச் சாலை ஒன்றை அமைத்து, அங்கு நெய்யப்பட்ட 'காலிக்கோ' முதலிய துணிகளைக் கவர்னர் துய்மாவோடும்,[3] அவர் சகோதரர் கபிரியேல்[4] உடனும் கூட்டு முறையில் 'பிரெஞ்சுத் தீவு' என்னும் மோரிசுக்கு அனுப்பிவந்தார். அத் தொழிற்சாலையும் அவர் செல்வத்திற்கு ஓரளவில் ஆதாரமாயிருந்ததென்னலாம்.

தரகுத் தொழில்

பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாரிடமிருந்து பிள்ளையவர்களுக்குக் கிடைத்து வந்த தரகுத் தொகைகள் சிறியனவல்ல. பல தடவைகளில் அவர் பத்தாயிரம் வராகன், பதினையாயிரம் வராகன் என்றெல்லாம் தரகாகப் பெற்

1. D'Auteuil 2. Nazir Jang 3. Dumas 4. Gabriel

றிருக்கிருர். தம் சொந்த நெசவுச் சாலையும், சாயக் கூடங்களும், தரகு வேலையும் ஒருபுறமிருக்க, வெளியூர்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட துணி களிற் சிலவற்றிற்கு அவரே வேறு பல நெசவா ளர்களுக்குக் குறிப்புத் தந்து, இன்னின்ன வகை யில் துணிகள் நெய்யப்பட வேண்டுமென்றும், இன்னின்ன காலத்திற்குள் அவை தம் கிடங்குக்கு அனுப்பப்பட வேண்டுமென்றும் சொல்லி வந்த ஏற்பாட்டினுலும், நெசவாளர்களுக்குக் கொடுக் கப்படும் கூலியின் திட்டத்தைக் குறிப்பிட்டு வந்த ஏற்பாட்டினுலும், நெசவாளர்களுக்குக் கொடுக் கப்படும் கூலியின் திட்டத்தைக் குறிப்பிட்டு வந்த முறையினுலும் அவருக்கு மதிக்கத்தக்க ஊதியம் கிடைத்து வந்தது.

ஆனந்தரங்கப் பிள்ளைக்குப் பிரெஞ்சு கிழக் கிந்திய கூட்டத்தார் பல ஊர்களின் நிருவாகத்தை ஒப்படைத்திருந்தனர். ஒரு சமயம் காரைக்காலை யும், அதனைச் சார்ந்த பல ஊர்களையும் அவர் பார்வையின்கீழ் விடுத்து, அவர் மூலமாகவே வரி வசூல் முதலியவற்றிற்குச் சிற்சில அதிகாரிகளை நியமிக்கச் செய்தனர். புதுச்சேரிப் பிராந்தியத்தி லும் பல சிற்றூர்கள் அவர் மேற்பார்வையிலேயே இருந்தன. அவ்வூர்களுக்கெல்லாம் அதிபராயிருந்த ஆனந்தரங்கப் பிள்ளைக்குப் பிரெஞ்சுக்காரர் ஊர் களின் சிறப்புக்கு ஏற்றவாறு, அவ்வூர்களினின்று வரும் வருமானத்தின் ஒரு பகுதியை ஈந்து வந் தனர்.

பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தின் சார்பாக வாணிபத் துறையில் அயல் நாடுகளிலிருந்து புதுச்

சேரிக்குக் கப்பல்கள் மூலமாகக் கொண்டு வரப் படும் சரக்குகள் பலவற்றையும் ஆனந்தரங்கப் பிள்ளையே தம் நாட்டில் விற்பதற்கு வழி தேடி யுள்ளார். அங்ஙனம் சரக்குகளைக் கொண்டுவரும் வர்த்தகர்களும் அவருடைய ஆதரவையே பெரி தும் தேடலானார்கள். அவர்களுக்கும் நாட்டு வணி கர்களுக்கும் இடை நின்று அவர் செய்து வந்த வாணிபக் காரியங்கள், அவருக்கு வருவாயைத் தேடித் தாராமலில்லை. சரக்குகளின் தன்மைக் கேற்றவாறு அவ்வருவாய் சிறிதும் பெரிதுமாய் இருந்திருக்கிறது.

**நில புலங்கள்**

ஆனந்தரங்கப் பிள்ளை தமக்கென நன்செய் புன்செய் நிலங்கள் மிகுதியாகப் படைத்திருந் தார். சில கிராமங்கள் முழு மையுமே அவருக்குச் சொந்த மாயிருந்தன. அவற்றுள் பிள்ளை சாவடி, பிள்ளை தோட்டம், முரட்டாண்டி சாவடி, சேதுராப்பட்டு, ஆய் குப்பம், வேங் கடம்மா பேட்டை ஆகிய ஊர்கள் சிறப்பாகக் குறிக்கத் தக்கன. செங்கற்பட்டும் அவருக்கு ஒரு காலத்தில் சொந்தமாயிருந்தது. இவற்றினின்றும் விளைபொருள்களை அவர் அடைந்து வந்தனர். அவ்விளைபொருள்களில் ஒரு பகுதி விற்றதுபோக, மற்றப் பகுதியை அவர் சேமித்து வைப்பது வழக் கம். அங்ஙனம் சேமித்து வைக்கும் தானியங்களை ஏழை மக்களுக்கு அளிப்பதுண்டு. புதுச்சேரியின் முற்றுகையின்போது பட்டினியால் வருந்திய மக்களுக்குப் பல நாள் உணவளித்ததற்கு ஆதார மாய் இருந்தவை, அப்படிச் சேமித்து வைத்த மூலப்பொருள்களே.

ஆனந்தரங்கப் பிள்ளை தமது சொந்தப் பொறுப்பிலும் வெளிநாடுகளுடன் வர்த்தகஞ் செய்து வந்தாரெனத் தெரிகிறது. அவர் தமக்குச் சொந்தமாக மரக்கலமொன்று வைத்திருந்தார் என்றால், அவர்தம் வர்த்தகம் எந்நிலைமையிலிருந்ததென்பதை விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவர் மரக்கலமாகிய 'ஆனந்தப் புரவி' பல வகைச் சரக்குகளை ஏற்றிச் செல்லும் தகுதி வாய்ந்ததென்பதும் அறியப்படுகிறது. கி. பி. 1740-ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 15-ஆந் தேதி அந்த 'ஆனந்தப் புரவி' புதுச்சேரியை விட்டுக் கொழும்பு நோக்கிச் சென்ற போது அதில் ஏற்றியிருந்த சரக்குகளின் விவரத்தை ஆனந்தரங்கப் பிள்ளை தம் நாட்குறிப்புகளில் குறித்திருக்கிறார்.

இதுவுமல்லாமல், மோரீசு தீவின் கவர்னரான 'தாவீது' [1] என்பார், புதுச்சேரியில் நெய்யப்படும் கட்டில் விரிப்புகளைத் தமக்கு அனுப்புமாறு ஆனந்தரங்கப் பிள்ளையைக் கேட்டிருந்ததும், அக்கவர்னர் விருப்பத்திற்கிணங்க ஆனந்தரங்கப் பிள்ளை நெசவாளர்களுக்குக் குறிப்புத் தந்ததும், பின்பு அவ்விரிப்புகளை மோரீசுக்கு ஏற்றுமதி செய்து அனுப்பியதும் கருதற்பாலன. தமக்கென நடந்த இவ்வர்த்தகம் போதிய வருவாயை அவருக்கு வழங்கியிருக்குமென்பதில் ஐயமில்லை.

துறைகள் பலவற்றிலும் பொருளீட்டிய துவிபாஷியாராகிய ஆனந்தரங்கப் பிள்ளை, சிறந்த செல்வத்தில் வாழ்ந்தாரென்பது மறுக்கற்பால

1. David

தன்று. பொருளை ஈட்டுவதிலும், அப்பொருளினு லாய நற்பயனை நாடுவதிலும், ஆனந்தரங்கப் பிள்ளை பெரிதும் கருத்துடையவராயிருந்தார். ஏழைகளுக்கு உதவுதலிலும், புலவர்களைப் புரப் பதிலும் அவர் செலவிட்ட தொகைகள் பலப்பல வாயின. புலவர் ஒருவருக்கு வாழை இலையொன் றில் பொற்காசுகளை நிரப்பி அவற்றோடு ஆடை ஆபரணங்களையும் அவர் மனமார வழங்கி அனுப் பியதை நோக்க அவர் செல்வத்தின் பெருமை தெளிவாகும்.

ஆனந்தரங்கப் பிள்ளை தம் நிலைமைக்கேற்ற வாறு தாம் வதிந்த இல்லத்தை ஒரு பெருமாளி கையாகவே அமைத்தார். அவர்தம் மாளிகை பல கூறுகளைப் படைத்த தாயிற்று. இன்றும் அதுபுதுச் சேரியில் அவர் பெயருள்ள தெருவில் நிலைத்திருக்கின்றது. கிழக்கிலும் மேற் கிலும் இருந்த பாகங்களில் அதன் சில பகுதிகள் இப்போது உருவம் மாற்றப் பெற்றுவிட்டன. என்றாலும், இல்லத்தின் சிறந்த பாகம் முன்னிருந் ததுபோலவே காட்சியளித்துக்கொண்டிருக்கிறது. புதுச்சேரியில் தமிழர்கள் வசிக்கும் பாகத்திலுள்ள வீடுகள் எல்லாவற்றிலும் பெரியது ஆனந்தரங்கப் பிள்ளை இல்லமே. அதன் நீளத்திற்கு ஏற்றவாறு அகலமும் அமைந்திருக்கிறது. அகத்தின் வாயில் ஆனந்தரங்கப் பிள்ளை வீதி என்னும் அவர் பெய ருள்ள தெருவில் பொருந்தியுள்ளது. இல்லத் தைத் தொடர்ந்துள்ள பூந்தோட்டம், அதற்குத் தெற்கேயுள்ள வேளாளர் வீதி வரையில் செல்லு

இல்லம்



*By courtesy of Mme. Robert Gaebele*

ஆனந்தரங்கப் பிள்ளையின் மாளிகை [பக்கம் 42]



*By courtesy of Mme. Robert Gaebele*

மாளிகையின் முன் தாழ்வாரம் [பக்கம் 43]

கிறது. புதுச்சேரி முற்றுகையின்போது ஆனந்தரங்கப் பிள்ளை தம் வீட்டின் வாயிலை இரண்டு மூன்று நாள் அடைத்து வைத்திருந்தபோது, மேற்கூறிய பூந்தோட்டத்தின் வழியாகவே அவர் வேளாளர் தெருவையடைந்து, கவர்னர் துய்ப்ளேக்ஸைக் காணச் சென்றுகொண்டிருந்தார்.

ஆனந்தரங்கப் பிள்ளை மனை, இந்துக்கள் மனைகளைப் போலவே வெளியில் திண்ணைகளையுடையதாயும், உள்ளே நடை, தாழ்வாரங்கள், வாசல், கூடம் முதலியன அமையப்பெற்றதாயும் இருக்கிறது. அதற்கு மேல் மாடமும் உண்டு. மேல் மாடத்தில் தென்புறமும் வடபுறமுமாக இரண்டு விசாலமான கூடங்கள் உள்ளன. கிழக்கிலும் மேற்கிலும் பல அறைகள் இருக்கின்றன. தெருப் பக்கம் வீட்டின் அகலத்திற்குச் சிற்ப வேலைப்பாடுடைய இரும்பு கைப்பிடிச் சட்டத்தோடு கூடிய தாழ்வாரம் ஒன்றுளது. வீட்டின் நடுக்கட்டிற்கு மேற்புறத்தில் ஒடு வேய்ந்த அகன்ற கட்டடம் ஒன்று அமைந்திருக்கிறது. அது பெண்களுக்குரியதாகும். அக்கட்டடத்திற்குப் போகவும் வரவும் இரண்டு வாயில்கள் இருக்கின்றன: ஒன்று, வீட்டின் நடுவாசலுக்கு அருகிலுள்ளது. மற்றொன்று. பூந்தோட்டத்திற்கு அண்மையிலுள்ளது.

ஆனந்தரங்கப் பிள்ளையின் அவ்வழகிய வீடு, பல பாகங்களில் சித்திரச் சிறப்புடையதாய் இருக்கிறது. கீழ்க் கூடத்திலும் அதற்கு அடுத்துள்ள தாழ்வாரங்களிலும் பாய்ச்சப் பெற்றிருக்கும் உத்திரங்கள் கைதேர்ந்த சிற்றுளி வேலைக்காரர்களால்

அழகு செய்யப் பெற்றிருப்பதை நாம் இன்றும் காணலாம். கூடத்திலுள்ள தூண்களும் அத் தகையனவாயிருக்கின்றன. மேனுட்டறிஞர் பலர் அவற்றைக் கண்டு தம் வியப்பைத் தெரிவித் துள்ளனர்.

வீட்டின் சுவர்கள் செங்கல்லினுல் கட்டப் பட்டு, மேலே சுண்ணும்பால் மெழுகப்பட்டிருக் கின்றன. அக்காலத்தில் பூசிய அச்சுண்ணம் இன் றும் நிலை குலையாமல் வழுவழுப்பாய் இருப்பதை நோக்க, அஃது எவ்வளவு உயர்ந்த முறையில் கூட் டப்பெற்று, எவ்வளவு சிறந்த முறையில் சுவரில் பொருத்தப்பட்டிருக்கிறதென்பதை உணரலாம். சுவர்களின் ஓரங்களில் உள்ள பொற்பூச்சுகள் இன்னும் பொலிவு குன்ருமலிருக்கின்றன.

இவற்றையெல்லாம் உன்னும்போது ஆனந்த ரங்கப் பிள்ளை தமது வீட்டைப் பெருஞ்செலவில் கட்டியிருக்க வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும்.

ஆனந்தரங்கப் பிள்ளை அரசியல் சம்பந்தமாகத் தம்மைக் காண வருபவர்களைத் தம் வீட்டுப் பூந் தோட்டத்தில் வரவேற்பது வழக்கம். அப்பூந் தோட்டத்தில் பூச்செடிகளோடு வேறு சில நிழல் தரும் மரங்களும் இருந்தன. அதன் நடுவண் செயற்கை நீரூற்று ஒன்று அமைத்து, அதைச் சுற் றிலும் திண்ணைகள் கட்டப்பட்டிருந்தனவாகை யால், அப்பொழில் அங்குள்ளார்க்கு இன்பந்தருவ தாயிற்று. இன்றும் அப்பொழில் ஓரளவு நிலைத் திருக்கின்றது.

மேற்கூறிய பூந்தோட்டத்தை அடுத்துத் தெற்கு வடக்காக ஊர்தி நிலையம் ஒன்று உண்டு.

ஊர்திகள்

அதில் ஆனந்தரங்கப் பிள்ளையின் பல்லக்கும், வண்டிகளும் இருந்தன. அவ்விடத்திலேயே அவர் குதிரைகளும், யானையும் கட்டப்பட்டிருந்தன. அவ்விடம் இன்றும் அதற்கேற்றதாகக் காணப்படுகிறது.

ஆனந்தரங்கப் பிள்ளை பல்லக்கில் செல்லுவதுண்டு. அவர் கவர்னரைப் பார்க்கப் போகும் போதெல்லாம் பல்லக்கிலேயே செல்லுவார். ஊருக்கு வெளியே போக நேர்ந்தால், அவர் குதிரைமீது போவதும் உண்டு. திருவேங்கடபுரச் சத்திரத்திற்குச் செல்லும் வழியில் தழைத்த ஆலமரம் ஒன்றிருந்ததென்றும், ஆனந்தரங்கப் பிள்ளை குதிரையின்மீது செல்லும்போது விளையாட்டாக அவ்வாலமரத்தின் விழுதைத் தாவிப் பற்றிக் குதிரையைச் செல்லவிடுத்து, பின் அதனைக் கூவி அழைத்து அருகில் வரச்செய்து, அதன் முதுகின் மேல் குதித்தேறிப் போவாரென்றும், அவர் சந்ததியார் கர்ண பரம்பரையாகக் கூறி வருகின்றனர்.

நெடுந்தூரம் போக நேர்ந்த போதெல்லாம் ஆனந்தரங்கப் பிள்ளை தம் யானைமீதே சென்றார். அரசியற்காரியங்களுக்காகவோ, வர்த்தகங் குறித்தோ அவர் மேற்கொண்ட போக்கு வரவுகளுக்கு யானையே மிக்க பயனுடையதாயிற்று.

கி. பி. 1755-ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் (யுவ ஆண்டு ஆனித் திங்கள்) ஆனந்தரங்கப்

பிள்ளை தம் புதல்வர் ஐயாசாமி என்பவருக்குத் திருமணம் செய்வித்தார். அக்காலை கவர்னர், மாநாட்டார்கள், பெருஞ்செல்வர்கள் முதலியவர் களை அழைத்தற்பொருட்டு ஊர் சொல்லுவதற் காகத் தம் இளைய குமாரர் அண்ணுசாமிக்கு உயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிவித்து, அவரை வெள்ளியாலாய அம்பாரியிட்ட தம் யானை மேல் ஏற்றி அனுப்பினுர்.

இதுவல்லாமலும் தாது ஆண்டு வைகாசித் திங்கள் 16-ஆம் நாள் (25-5-1756) விநாயகம் பிள்ளை என்னும் பிரமுகர் வீட்டில் நடந்த திரு மண ஊர்வலத்திற்கு ஆனந்தரங்கப் பிள்ளை தம் இளைய புதல்வர் அண்ணுசாமியை அனுப்பி வைத் தார். அப்போது அண்ணுசாமி, அவருடைய யானைமீதே ஏறிச் சென்ருர்.

ஆனந்தரங்கப் பிள்ளை தம் செல்வச் சிறப் புக்கு ஏற்ற வண்ணமே தம் இல்லத்தில் ஏற்பட்ட சுபாசுபங்களை நடத்தியுள்ளார். அதற்கு எடுத் துக்காட்டாக, ஒன்று கூறுவோம்:

மணப்பந்தர்

பிள்ளையவர்கள் ஐயாசாமி என்பவரின் திரு மணத்திற்கெனத் தம் இல்லத்திற்கெதிரில் விசால மான பந்தல் ஒன்று அமைப் பித்து, அதனைச் சிறந்த முறை யில் அலங்கரிப்பித்தார். அப் பந்தலுக்காகக் கால்கோள் விழா நடத்தியபோது பதினைந்து பீரங்கிக் குண்டுகள் போடப்பட்டன. பார்த்தலெமி,[1] கிய்யார்[2] முதலிய தம் உத்தி

1. Barthelemy 2. Guillard

PL. Shanmugham.



யோகஸ்தர்களுடன் கவர்னர் தெலெரித்து[1] திரு மணத்திற்கு வந்த போது, திருமணப் பந்தலைக் கண்டு பெரிதும் வியப்புற்றனர். கவர்னர் தெலெரித்து, "தமிழர்கள் திருமணங்களை இவ் வளவு சிறப்பாக நடத்துவார்களென்று நான் நினைக்கவேயில்லை!" எனக் கூறினர். அதற்கு அவருடனிருந்த கிய்யார், "ஆனந்தரங்கப் பிள்ளை தம் மூத்த புதல்வியின் திருமணத்திற்குச் செய்த சிறப்புகளில், இது நூற்றில் ஒரு பங்குகூட இல்லை எனப் பகரலாம்,'' என்று கூறியது குறிப் பிடத் தக்கதாகும்.

1. De Leyrit



## 6. அறச் செயல்கள்

ஆனந்தரங்கப் பிள்ளை பல இடங்களில் பொது மக்கள் சௌகரியத்தை முன்னிட்டுச் சத்திரங்களை நிருமாணித்துள்ளார். அவைகளில் பெரும்பாலன அக்காலத்தில் புதுச்சேரியை மற்றப் பெரிய நகரங்களோடு இணைக்கும் நீண்ட பாதைகளின் ஓரமாகவே அமைந்திருந்தன. அச்சத்திரங்கள் யாத்திரிகர்களுக்குப் பெரிதும் பயன்பட்டு வந்தன என்பதை எடுத்துக் கூறவேண்டுவதில்லை. சில சத்திரங்களைச் சூழ்ந்து மரங்கள் அடர்ந்த தோப்புகளும் இருந்து வந்தன. வேனிற் காலத்தில் தோப்புகளையுடைய சத்திரங்களில் பொது மக்களும் வழிப் போக்கர்களும் தங்குவதுண்டு. அன்றியும், ஆனந்தரங்கப் பிள்ளையே ஒவ்வொரு சமயம் ஆங்குச் சென்று இளைப்பாறுதலுமுண்டு. ஊரைச் சுற்றி அண்மையிலும் சேய்மையிலும் பல பாதைகளில் தோப்புத் துரவோடு சத்திரங்கள் சில இருந்திருப்பினும், அவைகளில் முக்கியமானவை இரண்டு :

**சத்திரங்கள்**

ஒன்று, புதுச்சேரியினின்று முரட்டாண்டி சாவடிக்குச் செல்லும் பாதையில் (புதுச்சேரி-திண்டிவனம் பாதை) அமைந்திருந்ததாகும். அச் சத்திரத்தின்பால் துய்ப்ளேக்ஸுக்கும் அதிகப் பற்றிருந்ததாகத் தோன்றுகிறது. அச்சத்திரத்தின் பக்கலிலுள்ள புளியங்தோப்பில் துய்ப்ளேக்ஸ் சென்று, மரத்தடியிலே சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, உல்லாசமாகக் காலங் கழிப்பதுண்டு. இப்படிச் செய்யுங்கால் அவர் அங்கிருந்து கீழ்த் திசையை நோக்கும்போது தம் முன்னே காணப்படும் தமது நகரமாகிய புதுச்சேரியின் வனப்பையும், அதன் அகன்ற ஆழியின் அழகையும் கண்ணுரக் கண்டு களிப்புறுவர். முரட்டாண்டி சாவடி என்னும் சிற்றூர், மேட்டுப் பாங்கான நிலப்பரப்பில் புதுச்சேரிக்கு மேற்கே மூன்று கல் தொலேவிலுள்ளதால், துய்ப்ளேக்ஸ் அன்றுகண்ட காட்சி, இன்றும் எவரும் அவ்வூரினின்று காணக் கூடியதாயிருக்கிறது.

**முரட்டாண்டி சாவடி**

முரட்டாண்டி சாவடிச் சத்திரமும் புளியங் தோப்பும் அவ்வூரில் எவ்விடத்தில் இருந்தன என்பதை இப்போது அறிய முடியவில்லே. முரட்டாண்டி சாவடியில் சிற்சில இடங்களில் இன்றும் புளிய மரங்கள் அடர்ந்தும் சிதறியும் இருக்கின்றன. அவற்றின் அருகில் கட்டடங்கள் எவையும் இருந்ததாகப் புலப்படவில்லே. முரட்டாண்டி சாவடி எல்லேயில் பாழடைந்த கட்டடங்களின் குறிகள் சில இன்றும் காணப்படுகின்றன.

ஆனால், அக்குறிகள் ஆனந்தரங்கப் பிள்ளையின் சத்திரத்தைக் குறிக்கத் தக்கனவாயில்லை. அவை பழைய பாதையின் ஓரங்களில் இருப்பதால், தரையில் காணப்படும் அடையாளத்தின் விசாலத்தைப் பொறுத்து அவை சிறிய தங்கு மண்டபங்களாய் இருந்திருத்தல் கூடும் என ஊகிக்கலாம். ஒட்டைச் சாவடி, கறிவேப்பிலைச் சாவடி, கொற்றன் சாவடி என அவற்றிற்குப் பெயர்கள் வழங்கி வருவதாக அவ்வூர் வாசிகள் கூறுகின்றார்கள். ஆனந்தரங்கப் பிள்ளையின் சத்திரத்தைக் குறித்து முரட்டாண்டி சாவடியிலுள்ள வயோதிகர்கூடக் குறிப்பொன்றுங் கூற இயலாதிருக்கின்றனர். எனவே, ஆனந்தரங்கப் பிள்ளையின் சத்திரம் அடியோடு அழிந்துபட்டிருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

**பிள்ளை சாவடி**

மற்றொரு சத்திரம் ஆனந்தரங்கப் பிள்ளையின் பெயரால் விளங்கி வரும் பிள்ளை சாவடி என்னும் சிற்றூரிலிருக்கும் சத்திரமாகும். ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகளில் காணப்படும் திருவேங்கடபுரம் என்னும் ஊரே இன்று பிள்ளை சாவடி என்று வழங்கப்படுவதாகவும், அதிலுள்ள சத்திரம் ஆனந்தரங்கப் பிள்ளையின் தந்தையாராகிய திருவேங்கடப் பிள்ளையால் கட்டப்பட்டதென்றும் கூறுகின்றனர். அச்சத்திரம் புதுச்சேரியினின்று சென்னைக்குப் போகும் பழைய சாலையின் ஓரத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. அது புதுச்சேரிக்கு

வடக்கில் ஐந்து கல் தூரத்திலுள்ளது. புதுச்சேரிக்கு வடபாலிருந்த பாதைகளில் அதுவே முக்கியமாயிருந்ததால், அதில் போக்குவரவு அதிகமாயிருந்தன. பாதையின் சிறப்புக்கேற்பச் சத்திரமும் பெரியதாயும் வசதி நிறைந்ததாயும் இருந்து வந்தது. துய்ப்ளேக்ஸ் அச்சத்திரத்தின்மீதும் பெரு விருப்புக்கொண்டிருந்தார். மாதமிருமுறை அல்லது இரண்டு மாதங்களுக்கொருமுறை அவர் பிள்ளை சாவடிச் சத்திரத்திற்குச் சென்று, இரண்டொரு நாள் அங்கேயே தம் பரிவாரங்களுடன் தங்குவதும் உண்டு. கவர்னர் அச்சத்திரத்திற்குப் போகும்போதெல்லாம் ஆனந்தரங்கப் பிள்ளை முன்னேற்பாடுகள் பல செய்வது வழக்கமாயிருந்தது. பிள்ளை சாவடிச் சத்திரம் ஊரின் நடுவே இருப்பதால், கவர்னரின் வரவு அங்கு அவர் தற்காலிகமாகத் தம் ஆட்சிக் கூடத்தை அமைப்பது போல இருந்தமையினுல், ஆனந்தரங்கப் பிள்ளை புதுச்சேரியிலிருந்து பிள்ளை சாவடி வரையில் பாதை நெடுகப் பச்சிலைகள் தெளித்தும், அதன் இரு புறங்களிலும் தென்ன மட்டைகளை நட்டும், தோரணங்களைக் கட்டியும் அலங்காரஞ் செய்வித்ததுமன்றி, கவர்னர் துய்ப்ளேக்ஸ் தம் மாளிகையினின்று புறப்பட்டுச் சத்திரஞ் சேரும் வரையில் அதிர் வெடிகள் போடுவித்தும் வருவாரானுர். இவையன்றி, ஆனந்தரங்கப் பிள்ளையின் சத்திரத்தில் கவர்னர் மேலே குறித்த வைபவங்களோடு எழுந்தருளியிருக்குங்கால், பிள்ளை சாவடி வாசிகளும் மற்றும் பிள்ளை சாவடியைச் சூழ்ந்துள்ள பல்வேறு கிராமங்களிலிருப்பவர்களும், அவ்வக்

கிராமத் தலைவர்களுடன் சென்று காணிக்கைகள் பல ஈந்து, கவர்னரைக் காணுதலும், அவருக்கு வணக்கம் செலுத்துதலுமுண்டு.

மேலே விவரிக்கப்பட்ட சத்திரம் இருக்கும் பிள்ளை சாவடி என்னும் ஊர், இது போழ்து இரண்டு பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டு, ஒரு பிரிவு பிரெஞ்சுக்காரர் வசத்திலும், மற்ருெரு பிரிவு ஆங்கிலேயர் ஆட்சியிலும் இருந்து வருகின்றன. பிரெஞ்சு பாகம், காலாப்பட்டு என்னும் பிரெஞ்சு வட்டத்தைச் சேர்ந்ததாயிருக்கிறது. ஆங்கில பாகம், தென்னாற்காட்டு ஜில்லா, திண்டிவனம் தாலூக்காவினுள் அடங்கியுள்ளது. இந்த இரண்டு பாகங்களும் பிரிவினைக் குறிப்பைத் தெளிவாக உடையனவாயில்லாமையால், இவற்றை நோக்குவார்க்கு இவ்விரண்டும் சேர்ந்து ஒன்ருகவே காணப்படுகின்றன. அரசாங்க வேற்றுமையைக் குறிக்கும் எல்லைக் கற்கள் இருந்து வரினும், அவ்வூரில் வதியும் மக்கள் பெரும்பாலும் எல்லை வேற்றுமையைப் பாராட்டாமலே சமூக வாழ்க்கையை நடத்தி வருகின்ருர்கள். தங்களுக்குள் சிற்சில சமயம் நேரக்கூடிய சச்சரவு காரணமாக மேல் அதிகாரிகளிடம் முறையிட்டுக்கொள்ள வேண்டி ஏற்படின், அக்காலையிலேதான் அவர்கள் தங்கள் தங்கள் அரசாங்கத்தாரிடம் விண்ணப்பித்துக் கொள்ளுகின்ருர்கள். இஃது இங்ஙனமாக, ஆனந்தரங்கப் பிள்ளையின் சத்திரமானது இப்பொழுது ஆங்கில எல்லையில் இருக்கிறது. சத்திரத்தின் பரிபாலனம் ஆனந்தரங்கப் பிள்ளையின் சந்ததியார் வசம் இன்றும் இருந்து வருகிறது.

சத்திரத்திற்கெதிரில் விசாலமும் ஆழமும் பொருந்திய குளம் ஒன்று இருக்கிறது. அக்குளத்தின் கிழ்க்கரை, பாதையின் ஓரமாய் அமைந்துள்ளது. இதனுல், கீழ்க்கரை முற்றிலும் கைப்பிடிச் சுவர் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. நான்கு பக்கங்களிலும் கருங்கல்லினுலாய படித்துறைகள் இருக்கின்றன. இக்குளம் முழுவதும் ஆங்கில எல்லையில் இருப்பினும், இதன் வடகரை மாத்திரம் பிரெஞ்சு எல்லையைத் தொட்டுக்கொண்டிருக்கிறது. இக்குளம் முன்னுளில் சத்திரத்தில் தங்குபவர்களுக்கும், மற்றவர்களுக்கும் பெரும்பயன் அளிப்பதாய் இருந்தது; இன்று கண்காணிப்பின்றிக் காணப்படுகிறது.

பிள்ளை சாவடிச் சத்திரம் மூன்று பிரிவினதாய் இருந்து வந்ததென்று கூறப்படுகின்றது. பாதைக்குக் கிழக்கேயுள்ள கட்டடம் பெரிதாய் இருப்பதால், அதில் ஒரு பகுதி அந்தணர்களுக்கும், மற்ருெரு பகுதி அந்தணரல்லாதார்க்கும் ஒதுக்கப்பட்டிருந்தன. தாழ்ந்த வகுப்பினர்க்குப் பாதையின் மேற்புறத்தில் குளத்திற்குத் தெற்கே முந்நூறு அடித் தொலைவில் தனியே ஓடு வேய்ந்த கட்டடமொன்று இருக்கிறது.

அச்சத்திரத்தில் அவ்வவ்வகுப்பாருக்கு உரிய பாகத்தில், பிரயாணிகள் ஒரு நாள் மாத்திரம் தங்குவதற்கு அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். நாள்தோறும் அங்கு இலவசமாக உணவு அளிக்கப்பட்டு வந்தது. அதுவுமன்றிச் சத்திரத்தின் அறச் செயலாகத் தண்ணீர்ப் பந்தல் ஒன்றும் நடைபெற்று வந்தது. வழிப்போக்கர்களுக்கும், ஏழை

மக்களுக்கும் கொள்ளுக் கஞ்சியும், நீர் மோரும வழங்கப்பட்டு வந்தன.

இப்பொழுது மேற்கூறிய அறங்களில் எதுவும் நடைபெறவில்லை. பழுதுற்றிருந்த சத்திரக் கட்டடம் அண்மையில் பாதுகாப்புக்கு வேண்டிய அளவில் சீர் செய்யப்பட்டிருக்கிறது. புதுச்சேரி யினின்று சென்னைப் பட்டினத்துக்குச் செல்லும் பாதை இது காலை வேருய் அமைந்துவிட்டபடி யாலும், போக்கு வரவு சாதனங்கள் விரைவாய் விருத்தியடைந்து வருவதனுலும், பிள்ளை சாவடிச் சத்திரத்தில் பிரயாணிகள் தங்குவதரிதாயிற்று.

பிரெஞ்சு எல்லையிலும் ஆங்கில எல்லையிலு மாகப் பரந்திருந்த ஆனந்தரங்கப் பிள்ளையின் நிலங்கள், சிறிது சிறிதாக அவர் குடும்பத்தாரிட மிருந்து பல குடி மக்களுக்குச் சொந்தமாகிவிட் டன. இன்று அக்குடும்பத்தாருக்குள்ள நிலங்கள் ஏறக்குறைய ஐம்பது காணியிருக்கலாம். அவை அனைத்தும் புன்செய் நிலங்கள். பிரெஞ்சு எல்லை யில் பெரிய மாந்தோப்பு ஒன்று உள்ளது.

பிள்ளை சாவடியில் கோவில் ஒன்று இருக் கிறது. அது பழைமையான துரோபதையம்மன் கோவிலாகும். அக்கோவிலில் நடக்கும் தீ மிதி விழாவுக்கு ஆனந்தரங்கப் பிள்ளை புதுச்சேரியி னின்று அதிகார முறையில் நல்லுடையும் ஆயுத மும் அணிந்து வந்திருந்து, நடத்தி வைப்பது வழக் கம். இன்று வரையில் அவ்விழா நடைபெற்று வருகிறது.

கோவில் இருப்பது ஆங்கிலப் பகுதி; தீ மிதி நடப்பது பிரெஞ்சுப் பகுதி. விழாக் காலத்தில்

இரண்டு அரசாங்க அதிகாரிகளும் அதனைக் கண் காணித்து வருகின்றனர்கள்.

துரோபதையம்மன் கோவில் பரிபாலனத்தை நெடுநாளாக ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதீனத்தார் கைநழுவ விட்டிருந்தனர். இது காரணமாகப் பிள்ளை சாவடிக்குச் சமீபத்திலிருக்கும் பொம்மைய பாளையம் பாலைய சுவாமி மடத்து ஆதீன கர்த்தர், அக்கோவில் தமது மடத்தைச் சார்ந்தது என்று கூறி வழக்குத் தொடுத்தார். ஆனந்தரங்கப் பிள்ளையின் குடும்பத்தார் அவ்வழக்கை நேரில் கவனித்து அதற்கு வேண்டிய முயற்சி எதுவும் செய்யாமையால், ஊர்க்குடி மக்கள் ஒன்று சேர்ந்து, அக்கோவில் ஊராருக்குச் சொந்தமாக வேண்டுமென்றும், கோவில் சம்பந்தமான எல்லா விவகாரங்களும் ஊர்க் குடி மக்களே பார்த்துக் கொள்ள உரிமையுடையவர்களென்றும் எதிர் வழக்காடினர்கள். கோவில் ஆங்கில எல்லையில் இருப்பதனால், வழக்கு ஆங்கில நீதி மன்றங்களில் நடைபெற்றது. கடைசியாக ஊரார் விரும்பிய வாறே, உயர் நீதி மன்ற முடிவும் ஏற்பட்டு, இப்பொழுது கோவில் நடவடிக்கைகள் அனைத்தும் பிள்ளை சாவடிக் குடி மக்கள் வசம் இருந்து வருகின்றன.

மேற்கூறிய இரண்டு சத்திரங்களைத் தவிரச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை பிள்ளை தோட்டம், ஆய் குப்பம், வேங்கடம்மா பேட்டை (வெங்கடாம் பேட்டை), தேன் பாக்கம், திண்ணனூர் என்னும் இடங்களில் இருக்கும் சத்திரங்களாகும்.

புதுச்சேரிக்கு மேற்கே ஒரு கல் தொலைவில் பிள்ளை தோட்டம் என்னும் பெயரிய சிற்றூர் ஒன்று இருக்கிறது. அது புதுச்சேரியினின்று வழுதாவூருக்குச் செல்லும் பாதையின் தென்

**பிள்ளை தோட்டம்**

புறமாகவும், வழுதாவூர்ப் பாதையையும் வில்லியனூர்ப் பாதையையும் இணைக்கும் சாலைக்கு மேற்புறமாகவும் அமைந்துள்ளது. இப்போது அவ்வூரில் உள்ள வீடுகளில் பெரும்பாலன, இவ்விரண்டு பாதைகளின் ஓரத்தில் இருக்கின்றனவேயன்றி, உட்பகுதியில் எதுவுமில்லை. இப்பகுதி முற்காலத்தில் தோப்பும் துரவும் உடையதாயும், புன்செய் நிலங்களைப் பெரிதும் உடையதாயும் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

இவ்விடத்தில் ஆனந்தரங்கப் பிள்ளைக்கு ஓர் அழகிய தோட்டம் இருந்ததாகவும், அதை அவர் இருந்த காலத்திலேயே பொது மக்கள் பிள்ளை தோட்டம் என்று வழங்கியதாகவும், அத்தோட்டத்தைச் சேர்ந்த ஊரும் பிள்ளைதோட்டம் என்று வழங்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. மேலே குறித்த இரண்டு பாதைகளின் ஓரத்தில் அமைந்துள்ள வீடுகள், ஆனந்தரங்கப் பிள்ளையின் காலத்துக்குப் பின் உண்டானவை. அவற்றுட் சில வெகு சமீப காலத்தில் கட்டப்பட்டவை.

பிள்ளை தோட்டத்தின் வடமேற்கு மூலையில் இப்பொழுது ஒரு சிறு கோவிலும், அதைச் சார்ந்து ஒரு குளமும், சில புன்செய் நிலங்களும் இருக்கின்றன. இவை இன்னும் ஆனந்தரங்கப்

பிள்ளையின் ஆதீனத்தார் வசம் இருந்து வருகின் றன. ஆதியில் ஆனந்தரங்கப் பிள்ளைக்கு முற்றும் சொந்தமாயிருந்த பிள்ளை தோட்டம், சிறிது சிறி தாகப் பலர் கைக்கு மாறி, இன்று அவர்கள் பொறுப்பில் இருப்பது மிகக் குறைவான அள வுடைய நிலமாகும். எனினும், அவ்வூருக்கு வழங் கப்பட்டு வந்த பிள்ளை தோட்டம் என்னும் பெயர் இன்றும் நிலவி வருகிறது. உயர்ந்த பதவியிலும் சிறந்த செல்வத்திலும் உள்ள ஒருவரை மரியாதை பற்றி அவர்தம் குலப்பட்டத்தை மாத்திரமோ, குடும்பப் பெயரை மாத்திரமோ சொல்லிக் குறிப் பிடுவது என்னும் கொள்கை வழக்கத்திலிருந்து வருவதை நாம் இன்றும் காண்கிறோம். அது போலவே ஆனந்தரங்கப் பிள்ளையின் தோட்டம் இருந்த இடமும் அதைச் சூழ்ந்துள்ள பிற இடங் களும் ஆனந்தரங்கப் பிள்ளை தோட்டம் என வழங்கிப் பின்பு மேற்சொன்ன காரணம்பற்றிச் சுருக்கமாகப் பிள்ளை தோட்டம் என வழங்க லாயின.

இக்காலை ஆனந்தரங்கப் பிள்ளையின் சந்ததி யாருக்குச் சொந்தமாயிருக்கும் பகுதியிலேதான், அக்குடும்பத்தில் இறப்பவர்களின் இறுதிச் சடங்கு கள் நடந்து வருகின்றன. அங்குள்ள கோவிலும், குளமும், புன்செய் நிலங்களும் அதற்கு அநுகூல மாயிருக்கின்றன.

கோவிலும் குளமும் ஒழுங்கான மேற்பார்வை யின்றிச் சீர்கெட்ட நிலையிலிருக்கின்றன. கோவில் சிறியதாயினும், அதன் கட்டுக்கோப்பு நன்றாய் அமைந்திருக்கிறது. இன்று அதில் விக்கிரகம்

ஒன்றுமில்லை. கதவுகளின்றிப் பாழிடம் போல அது காணப்படுகிறது. கோவிலை அடுத்துத் தென் புறத்தில் இரண்டு சிறிய மண்டபங்கள் இருக் கின்றன. அவை ஏறக்குறைய நல்ல நிலையில் உள்ளன. அவற்றுள் ஒன்றிலேதான் மூலத் தானத்திலிருந்த விக்கிரகங்கள் வைத்துக் காக்கப் பட்டு வருகின்றன.

இவ்வாலயம், விஷ்ணு ஆலயமாகும். இதில் எழுந்தருளியுள்ள மூர்த்திக்கு வேணுகோபால சுவாமி என்பது பெயர். ஆனந்தரங்கப் பிள்ளை திருமால் பக்தர் என்பதும், சிறப்பாகக் கண்ணன் அவதாரத்தில் கருத்துடையவர் என்பதும் தெரி கின்றன. பிள்ளை அவர்களின் சொந்தச் செல வில் சொந்த உபயோகத்திற்காகக் கட்டப்பட்ட இந்த வேணுகோபால சுவாமி ஆலயம் இதனை வலியுறுத்தும்.

இப்பொழுது வேணுகோபாலசுவாமி விக்கிரக மும் அதைச் சார்ந்த வேறு சிலவும் புதுச்சேரியி லுள்ள அந்தணர் ஒருவர் பாதுகாப்பிலிருக்கின் றன. கோவில் நடை முறைகளெல்லாம் மறைந்து போன இந்நாளில், அவ்வந்தணர் தாம் நினைத்த போது விக்கிரகங்கள் இருக்கும் மண்டபத்திற்கு வந்து, அதனைத் திறந்து அவ்விக்கிரகங்களுக்குச் செய்யவேண்டிய பூசையைச் செய்து போவதாகச் சொல்லப்படுகிறது.

விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருக்கும் மண்ட பத்தை அடுத்துள்ள மற்றொரு மண்டபம், இது காலை அவ்வூரிலுள்ள ஒரு கல்விச் சபையின் இருப்பிடமாய் இருந்து வருகிறது. அக்கல்விச்

சபையைச் சார்ந்தவர்கள் அம்மண்டபத்தைச் சுற்றிலும் நிலத்தைப் பண்படுத்திப் பூச்செடிகள் முதலியன வைத்து அழகு செய்திருக்கின்றார்கள். அதில் ஒரு வாசக சாலையும் நடைபெற்று வருவதால், அவ்வூர் மக்களுக்கு அது மிகவும் பயன்பட்டு வருகிறது.

பிள்ளை தோட்டத்தின் குளம் அரைப் பாகத்திற்கு மேலாகத் தூர்ந்துவிட்டது. இப்பொழுது அஃது ஒரு சிறு குட்டையாகவே காணப்படுகிறது. பழைய படித் துறைகள் மண்ணில் மறைந்துவிட்டன. என்றாலும், மேற்புறத்தில் ஒரு சில படிகள் இன்றும் தேய்ந்த நிலையில் தெரிகின்றன.

ஆனந்தரங்கப் பிள்ளை அடிக்கடி பிள்ளை தோட்டத்திற்குப் போவதும், வேணுகோபால சுவாமியைத் தொழுவதும், குளத்தங்கரையிலும் அதனை அடுத்திருந்த தோப்புகளிலும் தங்கி இளைப்பாறி வருவதும் உண்டு.

**ஆய் குப்பம்**

ஆய் குப்பம் என்பது ஒரு சிற்றூர். அது கூடலூர்த் தாலூக்காவில், கூடலூருக்குத் தெற்கே பத்துக் கல் தொலைவிலுள்ளது. அவ்வூர் ஒரு சுரோத்திரியக் கிராமமாகும். அக்கிராமம் முழுதும் இன்று வரையில் ஆனந்தரங்கப் பிள்ளையின் சந்ததியார் வசமே இருந்து வருகிறது ஆயிரம் ஏக்கர் நிலப் பரப்பையுடைய அக்கிராமத்தின் வருமானம், ஆண்டொன்றுக்குச் சுமார் 3000 ரூபாயாகும். இறை வரி ரூபாய் 1000 போக, ஆண்

டொன்றுக்கு ஆனந்தரங்கப் பிள்ளையின் குடும்பத்தார் ரூபாய் 2000 பெற்று வருகின்றனர்.

வேங்கடம்மா பேட்டை: ஆய் குப்பத்திற்கு நேர் மேற்கில் ஐந்து கல் தொலைவில் உள்ளது இக்கிராமம். இது பூர்வத்தில் ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதீனத்தாருக்குச் சொந்தமாயிருந்து, இப்பொழுது இதன் பெரும்பகுதி அரசியலார் கண்காணிப்பிலிருக்கிறது.

வேங்கடம்மா பேட்டையில் ஒரு சத்திரமும், திருமால் திருக்கோவிலொன்றும், பெரிய குளமொன்றும், அதனை அடுத்துள்ள மாந்தோப்பும், புளியந்தோப்பும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. முற்காலத்தில் வேங்கடம்மா பேட்டை வழியாக ஒரு பெரும்பாதை இருந்திருக்க வேண்டுமென்று எண்ணவேண்டியிருக்கிறது. அவ்வூர்ச் சத்திரம் தவிர, அவ்வூருக்குத் தெற்கிலும் வடக்கிலும், அண்மையிலும் சேய்மையிலும் பல பாழடைந்த சத்திரங்கள் காணப்படுகின்றன. வேங்கடம்மா பேட்டைச் சத்திரமும் இன்று பாழடைந்த நிலையிலேதான் உள்ளது. திருமாலின் திருக்கோவில் தென்னாட்டிலுள்ள பெரிய கோவில்களோடு வைத்தெண்ணக்கூடிய அளவினதாயிருக்கிறது. அக்கோவிலின் மூர்த்தியை வேணுகோபால சுவாமி என்று ஊரார் வழங்குகின்றனர். அச்சுவாமியின் சிறந்த திருவிழாக்களில் ஒன்றாகிய வைகாசி விசாக நாளில் ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதீனத்தார் செலவில் சுவாமி, பிள்ளை குளம் எனப்படும் அவ்வூர்க் குளத்தங்கரைக்கு எழுந்தருளித் தீர்த்தவாரி நடந்து வருவதுண்டு.

அவ்விழா, சில ஆண்டுகளாக நின்றிருப்பதாகக் கூறப்படுகிறது. சத்திரமும் கோவிலும் இருக்கும் நிலையைக் கூர்ந்து கவனித்தால், ஆனந்தரங்கப் பிள்ளையின் காலத்தில் வேங்கடம்மா பேட்டையில் தான தருமங்கள் சிறந்த முறையில் நடந்திருக்கலாமென எண்ண வேண்டியிருக்கிறது. இன்று அவற்றில் ஒரு சிறிதும் நடைபெறவில்லை.

மேனாட்டு வர்த்தகருக்கு உதவி

ஆனந்தரங்கப் பிள்ளையின் உதார குணத்திற்கு மற்றோர் உதாரணமுமுண்டு: புதுச்சேரியில் அடிக்கடி ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் போர் நிகழ்ந்து வந்தமையினால், ஒரு சமயம் விளைபொருள்களை அதிகமாகச் சேமித்து வைப்பதற்கு இயலாது போயிற்று. உணவுப் பொருள்கள் குறைவுபட்ட காரணத்தால், குடி மக்கள் பெரிதும் வருந்தலானார்கள். ஊரில் பஞ்சம் வந்ததெனவே பகர வேண்டியதாயிற்று. இந்நிலைமை பிரான்ஸ் தேசத்தில் உள்ள சிலருக்கும் தெரிய வந்தது. அப்போது அங்கிருந்த ஒரு வர்த்தகர், வேற்று நாட்டிலிருந்து அரிசி வாங்கி அதனைப் புதுச்சேரிக்குக் கொண்டுபோய் விற்றால் நல்ல ஊதியம் கிடைக்கும் என்று கருதி, அவ்வாறே ஒரு கப்பல் நிறைய அரிசி மூட்டைகளை ஏற்றிக்கொண்டு, புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். இங்ஙனம் அரிசி மூட்டைகளை வாங்கவும், அவைகளைக் கப்பல் மூலமாய்ப் புதுச்சேரிக்குக் கொண்டு வரவும் நீண்டகாலம் ஆயிற்று. அவர் புதுச்சேரிக்கு வந்த போது பஞ்சம் நீங்கி, அரிசி விலை மிகவும்

இறக்கமாகிவிட்டது. இதனை அறிந்த அவ்வர்த்தகர், திடுக்கிட்டு, செய்வதின்னதென்றறியாமல் திகைக்கலானார். பெரும்பொருள் சம்பாதிக்கலாமென்னும் பேராசையுடன் வந்த அவர், தமக்கு நேர்ந்த நஷ்டத்தை உன்னியுன்னி நலிவு மிகவுற்றார். அதுகாலை அவர் மனத்திலே ஒரு யோசனை தோன்றிற்று : புதுச்சேரியில் நாட்டு மக்களிடையே நல்லரசர் போன்றும், வேண்டுபவருக்கு வேண்டியபடி உதவி புரியும் உதார குணம் படைத்தவராயும் விளங்கிய உத்தமர் ஆனந்தரங்கப் பிள்ளையினிடத்திற்சென்று தம் குறைகளைக் கூறிக்கொள்ளலாமென்று எண்ணினார். அவ்வாறே அவர் ஆனந்தரங்கப் பிள்ளையைக் கண்டு, தமக்கு நேர்ந்த தாங்கவொண்ணாத் துயரத்தைத் தெரிவித்து, அதற்கு ஒரு நல்வழி தேடுமாறு வேண்டிக் கொண்டார். ஆனந்தரங்கப் பிள்ளை அண்டினோரை ஆதரிக்கும் தன்மையராதலால், அவர் கொண்டு வந்த அரிசி அனைத்தையும் அவர் வாங்கிய விலைக்கே ஒப்புக்கொண்டு, அதற்குரிய தொகையை அவரிடத்தில் கொடுத்தார். இவ்வரிய செய்கையைக் கண்ட அவ்வர்த்தகர், ஆனந்தரங்கப் பிள்ளையை வாயார வாழ்த்தினார். பின்னர், அவர், ‘இப்பேருபகாரத்திற்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்!’ என்று வருந்தித் தமக்குள்ள அன்பு மேலிட்டால்பிள்ளையவர்களுக்கு ஏதேனுமொன்று தமது நினைவாகச் செய்து தரவேண்டுமென்று தமக்குள்ளே முடிவு செய்துகொண்டார். அவ்வர்த்தகர், ஓவியக் கலையில்மிகவும் தேர்ச்சிபெற்றவராதலால், ஆனந்தரங்கப் பிள்ளையின் உருவப் படம்

ஒன்றைத் தம் கையால் தீட்டித் தர வேண்டுமென் பது அவரது விருப்பமாயிற்று.

ஆனந்தரங்கப் பிள்ளையின் படுக்கை அறையில் கட்டிலுக்கு முன்பாகப் பெரிய நிலைக் கண்ணுடி ஒன்று இருந்தது. நாள்தோறும் காலையில் அவர் படுக்கையினின்று எழுந்திருக்கும் போது அக்கண்ணுடியில் தம் உருவத்தைப் பார்த்து விட்டு வெளிச் செல்லுவது வழக்கம். இதனை அவ் வர்த்தகர் அறிந்திருந்தார். படுக்கை அறையிலுள்ள நிலைக் கண்ணுடியின் அளவில் ஆனந்தரங்கப் பிள்ளையின் உருவத்தை வரைந்து, அவர் அறியா வண்ணம் ஓர் இரவில் அந்நிலைக் கண்ணுடியை எடுத்துவிட்டு அவ்விடத்தில் அவ்வுருவப் படத்தை மாட்டி வைத்து, பிள்ளை அவர்களுக்கு வியப்பையும் களிப்பையும் அளிக்க வேண்டுமென்று அவர் அவாவினர். அதன்படியே கண்ணுடியின் அளவில் உடையும் கைத்தடி வாள் முதலிய சின்னங்களும் அணிந்த வகையில் ஆனந்தரங்கப் பிள்ளையின் உருவத்தை வரைந்து, பிள்ளை அவர்களின் ஏவலாளர்களின் துணைகொண்டு ஓர் இரவில் கண்ணுடியைக் கழற்றிவிட்டு, அதற்குப் பதிலாகப் படத்தை அங்குப் பதிய வைத்துவிட்டார். மறுநாட் காலையில் தூங்கி எழுந்த ஆனந்தரங்கப் பிள்ளை, வழக்கம்போலக் கண்ணுடி முன் தம் உருவத்தைக் காண முற்பட்டார். அப்பொழுது அவ் விடத்தில் தாம் உடையணிந்த கோலத்தோடு காணப்படுவதை அறிந்து, ஆச்சரியமுற்று, "என்னேயிது! மேலுடை இல்லாது படுத்திருந்த நமக்கு இப்போது மேலுடையேது!" என்று கலக்கமுற்

றுத் தம் மார்பின்மீது கையினுற்றடவிப் பார்த்தார். பார்த்ததும், மேலுடை இல்லாதிருப்பது தெளிவுறத் தெரியவே, தாம் கண்ணுடியென்று நினைந்திருந்ததை மிக்க கவனத்தோடு பார்க்கலாஞர். அதனுல், தம் முன்னிருப்பது கண்ணுடியன்றென்றும், தம் உருவமாகிய ஓவியமென்றும் அறிந்துகொண்டார். அதன்பின் அவ்வோவியம் எவ்வண்ணம் அங்கு அமைக்கப்பட்டது என்பதைத் தம்முடைய ஆட்களைக்கொண்டு விசாரித்து அறிந்து கொள்ளலாயினர்; கண்ணுடியில் தாம் காணும் தமது தோற்றத்திற்கும் அன்று படத்தில் தாம் பார்த்த தம் உருவத்திற்கும், பார்த்த அளவில் வித்தியாசம் பெரிதும் தோன்ருத வகையில் ஓவியம் அமைத்த வர்த்தகரை வரவழைத்து, அவரது ஓவியத் திறமையைப் பாராட்டி, அவருக்குப் பெரும் பொருள் பரிசாகக் கொடுத்தனுப்பினர்.

புதுச்சேரியைச் சுற்றிலும் ஆங்கிலேயர் படையெடுத்து வந்து பிரெஞ்சுக்காரர்களைத் தாக்கினர்.

**அருளுடைமை**

பிரெஞ்சுப் போர் வீரர்கள் சோர்வின்றி எதிர்த்துச் சமர் செய்தும், ஆங்கிலேயர்களைத் துரத்தியடிக்கும் ஆற்றல் அற்றவர்கள் ஆனர்கள். ஆங்கிலேயர்கள், புதுச்சேரியை முற்றுகையிட்டார்கள்; நகரையும் நண்ணிவிட்டார்கள். அவர்கள் ஊரினுள்ளே நுழைவதனுல் ஏற்படக்கூடிய ஆபத்தையறிந்த பிரெஞ்சு அதிகாரிகள், ஊரின் முப்புறத்திலுமிருந்த கோட்டைக் கதவுகளை மூடிவிட்டு, அக்கதவுகளுக்கண்மையில்

படைகளை அணி வகுத்து வைத்திருந்தார்கள். கோட்டையின் மேலிடத்திருந்தும் பகைவர்கள் மீது குண்டுகள் எறியப்பட்டன. இவ்விதம் தொடர்ந்து சில நாட்கள் வரையில் நடத்தி வர வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆங்கிலேயர்கள் கடைசியாகக் கோட்டை வாயில்களினுள்ளே புகுவதற்கு முடியாமல் பின்னடைய நேரிட்டது. முற்றுகை முடியுமட்டும் கோட்டைக் கதவுகள் அடைக்கப்பட்டிருந்ததால், நகருக்குப் புறம்பேயுள்ள ஊர்களிலிருந்து தானியங்களும் மற்ற உணவுப் பொருள்களும் புதுச்சேரிக்கு வாராது நின்று போயின. ஊரினுள்ளே இருந்த குடிமக்கள் அச்சத்தால் அல்லலடைந்தது ஒருபுறமிருக்க, உயிர் வாழ்வதற்கு வேண்டிய உணவுப் பொருள்களின்றிப் பசியாலும் பதைக்கலானார்கள். இந்நிலைமையை ஆனந்தரங்கப் பிள்ளை அறிந்தார். நாட்டு மக்களுக்கு நாயகர் போல விளங்கிய அவர், அம்மக்களின் நலிவைப் போக்க முனைந்தார்; தம்மிடத்திலிருந்த களஞ்சியங்கள் அனைத்தையும் திறக்கச் செய்து, அவைகளினின்று அவரவருக்கு வேண்டுமளவும் நெல், அரிசி, கம்பு, கேழ்வரகு முதலிய பல வகைத் தானியங்களைக் கொடுக்கச் செய்தார். முற்றுகை முடியுமட்டும் நாள்தோறும் தாமே நேர் நின்று இத்தகைய தானத்தை அவர் செய்து வந்ததைக் கண்ட பொது மக்கள், அவரது அறக் குணத்தைப் புகழ்ந்து, அவர் செய்கைக்கு மெச்சி, அவர்பால் முன்னிருந்ததைவிடப் பன்மடங்கு அன்பும் மதிப்பும் காட்டலானார்கள்.

துய்ப்ளேக்ஸ் சென்னை முற்றுகையின்போது சில ஊர்களைத் தீக்கிரையாக்க வேண்டுமென்று ஆனந்தரங்கப் பிள்ளையைக் கேட்டுக்கொண்டதாக மேலே குறிப்பிட்டோம். அதுகாலை ஆனந்தரங்கப் பிள்ளை, ஊர்கள் பகைவர்களுக்குச் சொந்தமாயினும், அவற்றில் வதியும் ஏழை மக்களின் நிலைமையை மனத்தில் உன்னி, அவர்கள்பால் இரக்கம் கொண்டு, துய்ப்ளேக்ஸிடம், "நீங்கள் சிங்கர் கோவில், கீழழிஞ்சிப்பட்டு, மேலழிஞ்சிப் பட்டு, பாகூர், கரிக்களாம் பாக்கம், கிருமாம் பாக்கம் முதலிய ஊர்களில் சில குடிசைகளைத் தீக்கிரையாக்க விரும்புகிறீர்கள். அங்ஙனம் தீ வைப்பதற்கு யான் ஏற்பாடு செய்கின்றேன். ஆனால், நாசமுறும் குடிசைகளின் சொந்தக்காரர்கள் எளியவர்களாகையால், அவர்களுக்கு எவ்வழியிலேனும் தகுந்த ஈடு செய்ய வேண்டும்," என்றார்.

இக்கூற்றினால் ஏழை மக்கள்பால் ஆனந்தரங்கப் பிள்ளை எவ்வளவு அருளுடையவராய் இருந்தாரென்பதை அறியலாகும். துய்ப்ளேக்ஸும் அவர் சொல்லியபடி ஈடு செய்வதாக ஒப்புக்கொண்டது கருதற்பாலது.



## 7. வாழ்க்கை முறை

பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்குத் துவிபாஷியாராயும், துய்ப்ளேக்ஸ் அரசாங்கத்திற்குத் திவானும், நாட்டு மக்களின் தலைவராயும், பொருள் மிகப் படைத்தவராயும் இருந்து வந்த ஆனந்தரங்கப் பிள்ளை, எளிய வாழ்க்கையையே விரும்பி, அதன்படி தம் வாழ்நாளை நடத்தி வந்தாரென்பது எவரும் கருதற்பாலது. உடையிலும் உணவிலுங்கூட அவர் எளிய முறையைக் கடைப்பிடித்து வந்துள்ளார். அரசியல் காரியங்களுக்காகவும் விசேட நாட்களிலும் அவர் உயர்ந்த ஆடைகளையும், தமக்குள்ள வாள் கைத்தடி முதலிய சின்னங்களையும் அணிந்துகொள்ளுவாரேயன்றி, மற்றக் காலங்களில் சாதாரண உடையணிந்தே வந்திருக்கின்றார். தாம் தமதில்லத்திலிருக்கும் காலத்தில் அவர் ஆடைகள் எளியவர் ஆடைகளைப்போன்றே இருந்தன. மேலாடையின்றிப் பெரும்பாலும் அவர் பள்ளியறையில்

**எளிய வாழ்க்கை**

படுத்துறங்குவது வழக்கம். தம் நாட்குறிப்புகளை அன்றாடம் எழுதுங்கால் இடையில் சோமன் மாத்திரமே அணிந்து,பிரம்பாலாய சாய்வான இருக்கையிலிருந்து, எழுதி வந்ததாகத் தெரிய வருகிறது. உணவும் பெருமிதமாக அவர் உண்டாரில்லை. காலையில் எளியவர் போலவே அவரும் பழைய அன்னம் உண்டு வந்தாரென்பது அவரது தினக் குறிப்புகளால் அறியக் கிடக்கிறது. இஃதன்றியும், தமது குடும்ப காரியங்களிலும், நிலபுலங்களைப்பற்றிய காரியங்களிலும் தாமே முன்னின்று அவைகளை ஒழுங்கு பெற நடத்துவதில் அவருக்கு ஆர்வம் மிகுதியுமுண்டு. பணியாட்களிடத்திலுங்கூட அவர் தம் பெருமையைப் பாராட்டாமல், அவ்வாட்களுடன் கலந்து,செய்யவேண்டிய பணியைச் செவ்வனே செய்து முடிப்பார். தம் நிலங்களில் அறுவடை நடக்கும்போது தாம் அருகிலிருந்து வேலையாட்களை ஊக்குவித்து, தாமும் ஒரு வேலையாளைப் போன்றிருந்து அவ்வறுவடையை நன்முறையில் செய்து வந்த செய்தி, புலவர் ஒருவரது கூற்றால் புலனாகின்றது.



## 8. குலமும் மதமும்

ஆனந்தரங்கப் பிள்ளை ஆயர் தொல்குலத்திற் றோன்றிய அறிஞர். அவர் தம் குலத்துக்குரிய ஆசாரங்களை அனுசரித்து, எவ்வித வழுவுமின்றித் தம் வாழ்நாள் முழுதும் நடந்து வந்திருக்கிறார். அவ்வுத்தமர் தம் குல மக்கள்பால் கொண்டிருந்த அன்பும் பெருமையும் போற்றத் தக்கவை.

**ஆயர் குடி**

அவர், செல்வர் வறியர் என்னும் வித்தியாசம் பாராட்டாது, தம் இனத்தாராகிய யாதவர் எல்லாரிடத்திலும் சம நோக்குடன் அவர்கள் மனங் கோணாது ஒவ்வொரு காரியமும் செய்து வந்திருக்கிறார். ஒருகால் தம் வீட்டில் நடந்த சுப சடங்கின்போது அங்கு வந்திருந்த ஏழை யாதவர் சிலர், தாம் ஏளனமாகக் கருதப்பட்டதாகக் கூறிச் சினங் கொண்டெழுந்த போது, ஆனந்தரங்கப் பிள்ளை அவர்களுக்கு இன்சொல் இயம்பி, அவர்களைச் சமாதானப்படுத்தித் தாமும் தம் மனைவியாரு

மாக அவர்களுக்கு அன்புடன் அறுசுவை அன்னம் படைத்து, உபசாரங்கள் பல செய்ததன்மேல், அவர்கள் இன்புற்றுத் தங்கள் இல்லஞ் சேர்ந்த செய்தி இன்றும் கர்ண பரம்பரையாகக் கூறப்படுகிறது. தம் குல மக்கள்பால் ஆனந்தரங்கப் பிள்ளை கொண்டிருந்த மதிப்புக்கு, அவர் இல்லத்தில் நிகழ்ந்த சிறப்புகளிலெல்லாம் அவர் செம்மையாய் நடந்துகொண்டதாகக் கூறப்படுவதே சான்றாகும்.

**வைணவ மதம்**

ஆனந்தரங்கப் பிள்ளை தம் வமிசத்துக்குரிய வைணவ மதத்தில் மிகவும் பற்றுடையவராயிருந்தார். அவர் தினந்தோறும் திருமாலை நினைந்து வணங்குவதும், திருமாலடியார்களைப் பூசிப்பதுமுண்டு. அவர் வைணவக் கோயில்களுக்குச் செய்திருக்கும் நன்கொடைகளும் நிருவாக ஏற்பாடுகளும் போற்றத் தக்கனவாயிருக்கின்றன. புதுச்சேரி ஸ்ரீ வரதராசப் பெருமாள் ஆலயத்தில் இன்றுவரை நடந்து வரும் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி உற்சவம், ஆனந்தரங்கப் பிள்ளையினுடையதே. பிள்ளையவர்கள் தமது மாளிகைக்கு அலங்காரமாக ஆங்காங்கு அமைத்த சித்திரங்கள், அவர்தம் மதப்பற்றை மாண்புறச் செய்கின்றன. திருமாலின் திருவிளையாடல்களைக் குறிக்கும் ஓவியங்கள், அவர் தம் மாளிகைக்கு ஓர் அற்புத அழகைத் தந்தன. அவற்றுள் இப்போதுஞ் சில அவரில்லத்தின் மேல் மாடியில் இருக்கின்றன. ஒரு சில, சிதைந்த நிலை

யிலிருப்பினும், சீர் குன்றுதிருக்கின்றன. ஆனந்த ரங்கப் பிள்ளையின் வழிபடு தெய்வம், ஆயர்தம் கொழுந்தாகிய கண்ணனென்றே கருத வேண்டி யிருக்கிறது. பிள்ளையவர்கள் ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி உற்சவத்துக்குச் செய்துள்ள ஏற்பாட்டையும், தமது வீட்டில் பூசனை புரிவதற்கென வைத்துள்ள கோவர்த்தனகிரி கோபாலன் படத்தையும், வீட்டின் அலங்காரத்திற்கென அமைத்த அழகிய சித்திரங்களிலே பெரும்பாலன கண்ணன் லீலை களைக் காட்டுவனவாயிருப்பதையும் கவனிக் கும்போது, திருமாலின் திருவவதாரங்களில் கண்ணன் அவதாரத்திலேதான் ஆனந்தரங்கப் பிள்ளை ஆர்வம் மிகவும் அடைந்திருந்தாரென்பது அறியப்படுகிறது. அவர் பிள்ளை தோட்டத்தில் கட்டுவித்த வேணுகோபால சுவாமி ஆலயமும், வேங்கடம்மா பேட்டையிலிருக்கும் அதே பெய ருடைய திருமால் திருக்கோவிலும் இதற்குச் சான்றுகளாகும்.



## 9. நாட்குறிப்புகள்

**நாட்குறிப்புகளின் வரலாறு**

ஆனந்தரங்கப் பிள்ளை இதற்கு முன் எவருஞ் செய்யாத ஓர் அரிய வேலையை மேற்கொண்டு செய்து வந்திருப்பது மிகவும் பாராட்டற்குரியது. அஃது அவர் எழுதி வந்த நாட்குறிப்பாகும். அக்குறிப்புகள் இந் நாள் வரையில் முற்றும் அச்சிடப்படவில்லை. அவை முற்றுமே கிடைக்கப் பெறவில்லையென்பதும் மிகையாகாது. அக்குறிப்புகள் முதன் முதலாக 1846 - ஆம் ஆண்டில் அ. கலுவா மொம்பிரேன்[1] என்பவரால் புதுச்சேரியில் ஆனந்தரங்கப் பிள்ளை இல்லத்திலே கண்டெடுக்கப்பட்டன. அவர் அக்குறிப்புகளோடு வேறு சில சரித்திர சம்பந்தமான அரிய சாசனங்களையும் கைப்பற்றினர். அவைகளின் அருமையையும் பெருமையையும் அறிந்த அவர், தமக்கென ஒரு பிரதி

---

1. A. Gallois Montbru

சித்தஞ் செய்துகொண்டார். அப்பிரதி, அக்காலத்தில் புதுச்சேரி அரசாங்கத்துக்கு நிருவாக சபையின் அமைச்சராயிருந்த எதுவார் அரியேல்[1] என்பவரால் எடுக்கப்பட்டது. அதுகாலை அரியேல் தமக்காக ஒரு பிரதியும் எழுதி வைத்துக்கொண்டார். பின்னர், அ. கலுவா மொம்பிரேனுடைய பிரதி, புதுச்சேரி அரசாங்கப் புத்தக சாலையில் அவரால் சேர்க்கப்பட்டுவிட்டது. அரியேல் தமக்கென எழுதிய பிரதி, இப்பொழுது பாரிஸ் தேசீயப் புத்தக சாலையில்[2] இருக்கிறது. தினக் குறிப்புகளின் மூலக் கையெழுத்துப் பிரதி எவரிடத்தில் இப்போதிருக்கிறதென்பது தெரியவில்லை ஆனந்தரங்கப் பிள்ளையின் சந்ததியார் வசம் அம் மூலப்பிரதி இதுகாலை இல்லையென்பது உறுதி.

ஆனந்தரங்கப் பிள்ளையின் தினக் குறிப்புகள் பாரிஸ் தேசீயப் புத்தக சாலையில், தமிழ்ப் பிரிவில் 143-ஆம் எண் முதல் 158-ஆம் எண் வரையில் குறிப்பிட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. 143-ஆம் எண்ணிலுள்ள குறிப்புகள், ஜாதகங்கள் சிலவற்றையும், ஆனந்தரங்கப் பிள்ளையின் கடிதங்களையும் 1783-ஆம் ஆண்டு வெர்சாய் உடன்படிக்கையின்[3] தமிழ்மொழி பெயர்ப்பையும், 1778-ஆம் ஆண்டில் நடந்த புதுச்சேரியின் முற்றுகையைப் பற்றிய பல விவரங்களையும், பாராட்டுச் செய்திகளையும், வாழ்த்துப்பாக்களையும், இன்னோரன்ன பிறவற்றையும் கொண்டவைகளாயிருக்கின்றன. 144-ஆம் எண் முதல் 154-ஆம் எண் வரையில், உள்ளவை

1. Edoward Ariel 2. Bibliotheque Nationale de Parise
3. Traite de Versailles

ஆனந்தரங்கப் பிள்ளை எழுதிய நிகழ்ச்சிக் குறிப்புகள் அடங்கியவை. 155, 156, 157 ஆகிய இம் மூன்று எண்களிலும் ஆனந்தரங்கப் பிள்ளையின் சகோதரர் புதல்வர் திருவேங்கடப் பிள்ளையவர்களால் எழுதப்பெற்ற குறிப்புகள் காணப்படுகின்றன. 158-ஆம் எண்ணில் சில கடிதங்களும் சோதிடக் குறிப்புகளும் காணப்படுகின்றன. இக் குறிப்புகள் நாள்தோறும் எழுதப்பட்டவை. ஆனந்தரங்கப் பிள்ளையே தம் கையால் எழுதினவைகளும் உண்டு. சில சமயம் அவர் சொல்லிவர, அவர் சிப்பந்திகள் எழுதினவைகளுமுண்டு. அக் குறிப்புகளிற் சில அதிக நீளமாயும், சில சுருக்கமாயும் இருக்கின்றன. நிகழ்ச்சிகள் எத்தன்மையானவைகளோ அத்தன்மைக்கேற்ப விரிவும் சுருக்கமும் இருத்தல் இயல்பே. தமக்குள்ள பெரிய அலுவல்களோடு தினக் குறிப்பு எழுதுவதிலும் ஆனந்தரங்கப் பிள்ளை எவ்வளவு அக்கறை கொண்டிருந்தாரென்பது அக்குறிப்பினைக் கவனிப்பார் நன்கு அறிவர். சில தினங்களில் நீண்ட சம்பவங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இவைகளை எழுதுவதற்குப் பல மணி நேரம் பிடித்திருக்குமென்பதில் ஐயமின்று. நிகழ்ச்சிகளை நுணுக்கமாகவும், முறையாகவும், மிகச் சரியாகவும் வரைந்திருப்பதை நோக்க, ஆனந்தரங்கப் பிள்ளை அவற்றை எவ்வளவு செவ்விய வகையில் செய்து வைத்திருக்கிறாரென்பது புலனாகும். ஒரளவினவாய் இல்லாது போயினும், அவைகளில் பல விடயங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருத்தலால், சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கு அவை மிகவும் பயன் தருவனவா

யிருக்கின்றன. குடும்பச் சச்சரவுகள், ஊர்ப்பேச்சு கள், மதச் சடங்குகள், துய்ப்ளேக்ஸ் முதலிய அரசியல் அதிகாரிகளின் உரையாடல்கள், நாட்டு நடப்புகள் முதலியனவெல்லாம் அக்குறிப்புகளில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகள் சென்னை அரசாங்கத்தினர்க்குச் சிறிதுகாலம் வரையில் தெரியாமலே இருந்தன. அவற்றை 1892-ஆம் ஆண்டில் புதுச்சேரியில் ஆங்கில ஸ்தானிகரா யிருந்த லெப்டினெண்டு ஜெனரல் மக்லீடு[1] என்பவரும், சென்னையில் சாம்ராஜ்ய சாசன இலாக்காப் பொது நிருவாகராயிருந்த ஆசிரியர் பாரஸ்டு[2] என்பாரும் அறிந்து, சென்னை அரசாங்கத்தாருக்குத் தெரிவித்தனர். அன்றியும், அக்குறிப்புகளில் காணப்பெறும் கருத்துகள் மிக்க மதிப்புள்ளனவென்றும், பயன் தரத்தக்கனவென்றும் வெளிப்படுத்தி, அவற்றினின்று பிரதியொன்று வாங்கி ஆங்கில மொழியில் அதனைப் பெயர்த்து வெளியிட வேண்டுமென்றும் மேற்சொன்ன அரசாங்கத்தினருக்கு யோசனை கூறப்பட்டது. ஆங்கிலேயரின் நடைமுறைகள் இந்தியாவில்-சிறப்பாகத் தென்னிந்தியாவில்-எவ்வாறு இருந்தன என்பதை ஆனந்தரங்கப் பிள்ளையின் குறிப்புகள் விளக்குவதனாலேயே ஆங்கிலேயர் அவர்பால் பற்று வைத்தனர். ஜெனரல் மக்லீடு

1. Lt. Gl. Macclied 2. Prof. G. W. Forrest, Director General of Imperial Records

புதுச்சேரியில் ஸ்தானிகராயிருந்தது, அக்காலத்தில் ஆனந்தரங்கப் பிள்ளையின் குறிப்புகளுக்கு அரியேல் மொம்பிரேன் முதலியவர்களால் பிரதி எடுக்கப்பட்ட செய்தியை அவர் அறிய ஏதுவாயிற்று. இதனை அறிந்த பின் அவர் ஆசிரியர் பாரஸ்டுக்கு இது பற்றித் தெளியக் கூறினர். பின்பு இருவரும் கலந்து அக்குறிப்புகள் ஆங்கில அரசாங்கத்திலிருக்கவேண்டிய அவசியத்தைப் பற்றிச் சென்னை அரசாங்கத்தினருக்கு வற்புறுத்திக் கூறினர். அதுபோது சென்னை அரசாங்கத்திற்கு அதிபராயிருந்த வென்லாக்குப் பிரபு[1] நாட் குறிப்புகளின் அருமையை அறிந்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தினருக்கெனப் பிரதியொன்று எடுக்கக் கட்டளை பிறப்பித்தார். அதன்படி பிரதி எழுதும் வேலையை மக்லீடே ஏற்றுக் கொண்டார். 1892-ஆம் ஆண்டின் இறுதியில் குறிப்புகளின் பிரதி எழுதும் வேலை ஆரம்பிக்கப் பட்டது. ஜெனரல் மக்லீடே அதில் அக்கறை பெரிதும் கொண்டு, அதனைக் கண்காணித்து வந்ததுமன்றி, வேலை துரிதமாக நடைபெறுதற்கு வேண்டிய சௌகரியங்களையும் அவ்வப்போது செய்து வந்தார். அதன் பின் நாட்குறிப்புகளின் ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டது. அம் மொழிபெயர்ப்பு 1896-ஆம் ஆண்டின் இறுதியில் முடிவு பெற்றது. அச்சமயம் 1836-ஆம் ஆண்டு செப்டம்பர் முதற்கொண்டு, 1861-ஆம் ஆண்டு ஜனவரி வரையில் குறிப்புகளில் எவ்விதக் குறைபாடும் இல்லையென்று கருதப்பட்டது. ஆனல்,

1. Lord Wenlock

சிறிது காலத்திற்குப் பிறகு சில பகுதிகள் விடு பட்டிருக்க வேண்டும் என்பது தோன்றிற்று. எனவே, ஆங்கில அரசாங்கத்தினர் மற்ெருரு முறை தம் சிப்பந்திகளைப் புதுச்சேரிக்கு அனுப்பி, மூலக் குறிப்பினை ஆராய்ந்து பார்க்கச் செய்தனர், அவ்வாராய்ச்சியின்போது சிற்சில நாட்களின் குறிப்புகள் மறைந்து போயின என்பது தெரிய வந்தது. மறைந்து போன பகுதிகள் மொம்பி ரேன் எழுதியவற்றிலும் காணப்படவில்லை. அப் பகுதிகளைக் கண்டு பிடிப்பதற்காக ஆங்கில அர சாங்கத்தார் நெடுநாள் பெருமுயற்சி செய்தனர். அம்முயற்சி எவ்விதப் பலனும் தாராதுபோயிற்று. ஆகவே, உள்ளதைக்கொண்டே மொழி பெயர்ப்பு வேலையை முடிக்க வேண்டியதாயிற்று. நாட் குறிப்புகள் ஆங்கில மொழியில் ஆக்கப்பட்டபின், அவைகளைச் சென்னை அரசாங்கத்தாரே அச்சியற் றிப் புத்தக உருவத்தில் வெளியிடத் தொடங்கி னர். இதுகாறும் பன்னிரண்டு வெளியீடுகள் வெளி வந்திருக்கின்றன. ஒவ்வொரு வெளியீட்டி லும் சென்னை அரசாங்கத்தார் புதுச்சேரி அரசாங் கத்தாருக்கு ஒரு பிரதியும், ஆனந்தரங்கப் பிள்ளை யின் குடும்பத்தாருக்கு ஒரு பிரதியும் அனுப்பி வருகின்றனர்.

அரியேல் என்பவரால் எடுத்துச் செல்லப் பட்டு, பாரிஸ் தேசிய நூல் நிலையத்தில் வைக்கப் பட்டிருக்கும் தமிழ்ப் பிரதியின் பிரெஞ்சு மொழி பெயர்ப்பு இதுவரையில் முற்றுஞ் செய்யப்பட் டிருப்பதாகத் தெரியவில்லை. புதுச்சேரி அரசாங்க நூல் நிலையத்திலும் பிரெஞ்சு மொழி பெயர்ப்பு

முழுதுமுள்ளதாய் ஒன்றும் இல்லை. மொம்பிரேனால் புதுச்சேரி நூல் நிலையத்தில் வைக்கப்பட்டதாக மேலே கூறிய தமிழ்ப் பிரதி இதுகாலை அங்கு இல்லையெனச் சொல்லப்படுகிறது. அது என்னவாயிற்றென்பதும் அறிவதற்கியலவில்லை. நாட் குறிப்புகளின் பிரெஞ்சு மொழி பெயர்ப்பு எவ்வளவுதான் உண்டு? ழூலியேன் வேன்சோன்[1] என்பார் மேற்கண்ட குறிப்புகளில் சிலவற்றை மாத்திரம் பொறுக்கி எடுத்து மொழி பெயர்த்திருக்கிறார். 'இந்தியாவில் பிரெஞ்சுக்காரர்கள்' என்னும் தொடர் நூலின் மூன்றாவது தொகுதியில் பதினைந்தாவது பகுதியாக அம்மொழி பெயர்ப்பு வெளியிடப் பெற்றிருக்கிறது. அது பாரிஸில் 1894-ஆம் ஆண்டில் வெளி வந்துள்ளது.

**நாட்குறிப்புகளின் பெற்றிமை**

ஆனந்தரங்கப் பிள்ளை எழுதி வைத்த நாட் குறிப்புகள் புதுச்சேரியிலும் அதைச் சார்ந்த பல இடங்களிலும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் நிகழ்ந்த பல திறத்தனவான போர் விசேடங்களைத் தெளிவாக உணர்த்துகின்றன. பிரெஞ்சுக்காரர்களுக்கு மாத்திரமேயன்றி, ஆங்கிலேயர்களுக்குங் கூடத் தாங்கள் தென்னிந்தியாவில் நிகழ்த்திய சம்பவங்கள் அக்குறிப்புகள் மூலமாக நுண்ணிய முறையில் காணக் கிடப்பதால், அவை இந்திய சரித்திரத்திற்கும், பிரான்ஸ் இங்கிலாந்து முதலிய தேசங்களின் சரித்திரத்திற்கும் போதும்

1. Julien Vinson

ஆதாரமாயிருக்கின்றன என்பது மிகையாகாது. ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகள் இரு தேசங்களுக்கும் ஏற்பட்ட விரோதத்தை மாத்திரம் குறிக்கவில்லை. அவை பாரத நாடு—சிறப்பாக தென்னாடு—அதுகாலை இருந்த நிலைமையையும், மக்கள் எத்தகைய வாழ்வு நடாத்தினார்கள் என்பதையும் தெளிவுறத் தெரிவிக்கின்றன.

ஆனந்தரங்கப் பிள்ளை தம் நாட்குறிப்புகளை ஒரு சரித்திரக்காரர் என்னும் முறையில் எழுதவில்லை. அவர் தமது ஞாபகார்த்தத்திற்கும் தமக்குப் பின் தம் சந்ததியார் படித்து அறிவதற்கும் அவ்வப்போது தாம் கண்டனவும் கேட்டனவும் செய்தனவுமாகிய காரியங்களை எழுதலானார். "காதால் கேட்டவைகளையும், கண்ணால் பார்த்தவைகளையும், கப்பல்கள் வருவதையும், கப்பல்கள் போவதையும், ஆச்சரியங்களும் புதுமைகளும் நிகழ்ந்தால் அவற்றையும் இத்தினசரியில் குறிக்க இருக்கிறேன்." என அவர் தம் நாட்குறிப்புகளைத் தொடங்கும்போது முதலிலே குறிப்பிட்டுள்ளார். அக்குறிப்பே அவற்றின் பெற்றியை முற்றும் விளக்குவதாகும். ஒவ்வொரு நாளும் முறையாகக் குறிப்புகளை எழுதி வந்தமையால், சரித்திர ஆராய்ச்சியாளர்களுக்கு அவை மிகவும் பயன்பட்டு வருகின்றன. அக்குறிப்புகளாலேயே பிள்ளை அவர்களின் குடும்ப சம்பந்தமான காரியங்களும், துய்ப்ளேக்ஸின் தனித்த வாழ்க்கையைப்பற்றிய செய்திகளும் அறியக் கிடக்கின்றன. புதுச்சேரிக்கு வந்த பிரெஞ்சு அதிகாரிகளின் குணகுணங்களும், அரசியல் திற

மையும் எவ்வாறு இருந்தன என்பதை இப்போது பிரெஞ்சுக்காரர்கள் ஆனந்தரங்கப் பிள்ளையின் குறிப்புகளாலேயே பெரும்பாலும் அறிகின்றார்கள். அக்குறிப்புகள் ஒரு பெரிய வரலாற்றுக் கருவூலம் என்றும், அவை இல்லாது போயின், இந்தியாவில் பிரெஞ்சுக்காரர்கள் செய்த செய்கைகளிற் பல மறைபட்டுப் போயிருக்குமென்றும் அவர்களே கூறுகின்றார்கள்.

ஆனந்தரங்கப் பிள்ளை தாம் எவரெவரோடு தொடர்பு கொண்டிருந்தாரோ, அவர் எல்லாரைப் பற்றியும் தமது நாட்குறிப்புகளிலே குறித்துப் போயினர். அக்குறிப்புகளைப் படிக்குங்கால், கவர்னர் துய்ப்ளேக்ஸ் முதல் சாதாரண சேவகன் ஈறாக ஒவ்வொருவருடைய குணநலங்களும் செயல்களும் தெரியவருகின்றன. துய்ப்ளேக்ஸின் தன்மைகளைப்பற்றிப் பல சந்தர்ப்பங்களில், பலவாறு அக்குறிப்புகளில் பகரப்பட்டிருக்கிறது. ஆனந்தரங்கப் பிள்ளை துய்ப்ளேக்ஸினிடத்தில் சாதாரண நண்பரைப் போலப் பேசுவதும், துய்ப்ளேக்ஸ் நோயுற்ற காலையில் அவரருகில் இருந்து உபசார வார்த்தைகள் கூறுவதும், அவர் உணவருந்துங்கால் உடனிருந்து காலப் போக்காக வார்த்தையாடுவதும், அவர் கோபமுற்ற போது அமைதியான வார்த்தைகளைக்கூறி அவரைத் தணிவிப்பதுமாகிய பல செய்திகள் நாட்குறிப்புகளால் அறியக் கிடக்கின்றன. ஆனந்தரங்கப் பிள்ளை துய்ப்ளேக்ஸினிடத்தில் மிகவும் அந்நியோந்நியமாய் இருந்து வந்ததால், அவரது இல்லற வாழ்க்கையைப்பற்றிய செய்திகளைக்கூட அவர் நன்கு அறிந்திருந்தார்.

துய்ப்ளேக்ஸ் தம் மனைவியாரிடத்தில் உரையாடும் போதெல்லாம் அடங்கியொடுங்கியே இருந்தாரென்று தோன்றுகின்றது. "துய்ப்ளேக்ஸ் தம் மனைவியார் முன் மூக்குக் கயிற்றுக்கடங்கிய காளை போல அமைதியாகப் பேசுவார்," என்று ஆனந்த ரங்கப் பிள்ளை தம் குறிப்புகளில் ஓரிடத்தில் எழுதியிருக்கிறார்.

ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்புகளைப் பற்றித் திரு. வ. வே. சு. ஐயர் அவர்கள் வெளியிட்ட உட்கருத்து வருமாறு:—

"அவர் (ஆனந்தரங்கப் பிள்ளை) எழுதி வைத்திருக்கும் குறிப்புகளைப் படிக்கும் போது அக்காலத்துத் தமிழ்நாட்டை நாம் சலனப் படக் காட்சியில் பார்ப்பது போன்ற உணர்ச்சி நமக்கு உண்டாகிறது. அத்தினசரியாகிய புகைப் படச் சுருள் அவிழ அவிழ, எத்தனை விதமான உருவங்கள் தோன்றி மறைகின்றன! ஒவ்வோர் உருவமும் உயிரோடிருப்பது போலத் தோன்றுகிறது! ஊசியால் குத்தினால் அவ்வுருவங்களினின்று இரத்தம் வருமென்று நமக்குத்தோன்றும்; கிசுகிசுமூட்டினால் சிரித்துவிடுவார்கள் என்று நினைப்போம். அவ்வளவு உயிருள்ள மனிதன் என்கிற உணர்ச்சி நமக்கு உண்டாகிறது."



## 10. இறுதிக் காலம்

பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அடிக்கடி நடந்துவந்த போர், நாளுக்குநாள் கடுமையாகிக்கொண்டே வந்தது.

**புதுச்சேரியின் துன்ப நிலை**

அதனைச் சமாளிப்பது பிரெஞ்சுக்காரர்களுக்குப் பெரிதும் சங்கடமாகிவிட்டது. 1760-ஆம் ஆண்டில் போர் காரணமாகப் புதுச்சேரியில் கைத்தொழில் எதுவும் நடைபெறாமலும், மக்கள் உயிர் வாழ்வதற்கு வேண்டிய உணவுப் பொருள்கள் குறைவுபட்டும் அவர்கள் மனத்துயர் அடைய நேர்ந்தது. நகரமே பொலிவிழந்துவிட்டதென்னும்படியாயிற்று. பிரெஞ்சுக்காரர்கள் வந்தவாசியில் தோல்வியுற்று அந்நகரை இழந்தவுடனே புதுச்சேரிக்கு அண்மையில் அவர்கள் தங்கள் எதிரிகளால் தாக்கப்பட்டார்கள். ஆங்கிலேய சேனைகள் செஞ்சியிலிருந்து புதுச்சேரியை நோக்கிச் சென்று, முரட்டாண்டி சாவடியில்

வந்து சேர்ந்தன. நகரைக் காக்க வேண்டிய ஏற்பாடுகள் பல பிரெஞ்சுக்காரர் செய்யத் தொடங்கினர். ஊரிலிருந்த தனவந்தர்களிடம் ஏராளமான பொருள் கேட்கப்பட்டது. ஆங்கிலேயர் நகரைச் சுற்றி முற்றுகையிட்டனர். அவர்கள் வடக்கில் மட்டுமன்றி, மேற்கிலும் தெற்கிலுங்கூட அணுகிவிட்டார்கள். மேற்கில் வழுதாவூர், வில்லியனூர் ஆகிய இடங்கள் அவர்கள் வசமாய்விட்டன. தென்புறத்தில் அரியாங்குப்பத்தையும் அவர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள். அப்போது கவர்னராயிருந்த லல்லி தொலாந்தால்,[1] நிலைமையை ஒழுங்குபடுத்துவதற்காக ஊரிலிருந்த நாட்டாண்மைக்காரர்களைத் தொந்தரவு செய்து பெருந்தொகை கொடுக்கும்படி கட்டளையிட்டார்.

**பிள்ளையின் மனத் தளர்ச்சி**

ஆனந்தரங்கப் பிள்ளை இவற்றைக்கண்டு மனத்தளர்ச்சியடைந்து, 'நீண்ட நாளாய்ப் புகழோடு விளங்கிய புதுச்சேரி என்னவாகுமோ!' என்று ஏக்கமுற்றார். திருவேங்கடபுரம் என்னும் இடத்தைப் பகைவர் பற்றிக்கொண்டனர். ஆங்கிலேயர் எல்லாப் பக்கங்களிலும் படையெடுத்துத் தாக்கவே, புதுச்சேரியில் நாளுக்கு நாள் உணவுப் பொருள்கள் கிடைப்பது அரிதாயிற்று. பிரெஞ்சு சிப்பாய்கள் போதிய உணவின்றிச் சோர்வுற்றார்கள். அப்போது லல்லி தொலாந்தால், புதுச்சேரியிலுள்ள வீடுகளில் தானியங்

1. Lally Tollendal

களிருந்தால், அவற்றை அதிகாரிகளுக்கு உடனே தெரிவிக்க வேண்டுமென்று கட்டளை பிறப்பித்தார். ஊரிலுள்ள தானிய அளவை அறிந்து கொள்ளவும், அவசியமானால் அவற்றை வலுவில் கைப்பற்றிச் சிப்பாய்களின் உணவுக்குஅவற்றைப் பயன்படுத்திக்கொள்ளவும் கருதியே அவர் அக் கட்டளையை வெளியிட்டார்.

இவை ஆனந்தரங்கப் பிள்ளையின் மனத் துயரை அதிகப்படுத்தின. புதுச்சேரியை விட்டுத் தமது குடும்பத்துடன் சென்னைக்குச் சென்றுவிட அவர் எண்ணி, முதலில் 1760-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் தம் குடும்பத்தினரைச் சதுரங்கப் பட்டினத்திற்கு நகைகளுடனும் சிறிது பணத்தொகையுடனும் அனுப்பிவிட்டார்; சில நாட்களுக்குப் பின் தாமும் பிரயாணப்பட இருந்தார். ஆனால், அதுகாலை அவர் நோய்வாய்ப் பட நேர்ந்ததால், பிரயாணப்பட முடியாது போயிற்று. அவர் கடல் மார்க்கமாகச் செல்லக் கருதினமையால், அவர் பிரயாணத்திற்குச் சித்தஞ் செய்யப்பெற்ற ஓடமும் கரை சேர்க்கப்பட்டு ஒதுக்கிவிடப்பட்டது. விரைவில் நோயும் அதிகரித்ததால், 1761-ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 11-ஆந் தேதி அவர் விண்ணுலகஞ் சேர்ந்தார். அவர் உயிர்நீத்த நான்கு நாட்களுக்குப் பின் புதுச்சேரி பகைவர் வசமாயிற்று.

**பிள்ளையின் மறைவு**

# 11. நைனியப்பப் பிள்ளை

ஆனந்தரங்கப் பிள்ளையின் தகப்பனாராகிய திருவேங்கடப் பிள்ளை, தம் மைந்தர் பிறந்த சிறிது காலத்திற்குப் பின் புதுச்சேரியிற் குடியேறி அங்கேயே தங்கிவிட்டாரென்றும், அங்ஙனம் சென்று தங்கியதற்குக் காரணம், அக்காலையில் புதுச்சேரியில் வசித்து வந்த அவர் மைத்துனர் நைனியப்பப் பிள்ளையின் வேண்டுகோளேயாகும் என்றும் முன்னர்க் குறிப்பிட்டுள்ளோம். திருவேங்கடப் பிள்ளையின் சிறப்புக்கும், பின்னர் அவருடைய குமாரர் ஆனந்தரங்கப் பிள்ளையின் கீர்த்திக்கும் காரணமாயிருந்த நைனியப்பப் பிள்ளையைப் பற்றி ஒரு சிறிதேனும் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியமாகும். நைனியப்பப் பிள்ளையைப்பற்றி விரிந்த வரலாறு கிடையாது போயினும், அவர் அரசியலில் ஈடுபட்டிருந்த அளவில் கிடைத்துள்ள நிகழ்ச்சிகளைக்கொண்டு அவர் எத்தகைய நிலைமையில் இருந்து வந்தாரென்பது ஒருவாறு அறியக் கிடக்கிறது.

**புதுச்சேரிக்கு வந்த வரலாறு**

பிரான்ஸுவா மார்த்தேன் [1] ஆளுகையின் கீழ் 1690-ஆம் ஆண்டில் புதுச்சேரி சிறிது அபிவிருத்தியடைந்தது. பிரெஞ்சுக்காரரின் இந்திய தேசக் குழுவினருக்குத் துவிபாஷியாராய் இருந்து

1. Francois Martin

வந்தவர் நாட்டுக் குடிமக்களுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டனர். அக்காலை பிரான்ஸுவா மார்த்தேன், பிரான்ஸ் தேசத்தின் பெயரால் பிரசித்த அறிக்கையொன்று வெளியிட்டார். புதுச்சேரியில் குடியேறும் குடும்பங்களின் பழக்க வழக்கங்கள் யாவும் காக்கப்படுமென்றும், அக்குடும்பங்கள் அநுசரித்து வரும் மதங்களில் தலையிடப்படமாட்டாதென்றும் அவ்வறிக்கை தெரிவித்தது. அது கண்ட பல தொழிலாளர்களும், தனவந்தர்களும் புதுச்சேரிக்குப் போந்தார்கள்.

பிரான்ஸுவா மார்த்தேனுக்குப் பின்னர், அவருக்குப் பதிலாக நியமிக்கப்பெற்ற ஹெபேர் [1] என்பவரும் மேற்சொன்ன வாக்குறுதிகளைத் தந்ததோடு, அவரவர் தத்தம் விருப்பப்படி வியாபாரஞ் செய்யலாமென்றும் விளம்பரப்படுத்தினர்.

சென்னையில் அச்சமயம் வர்த்தகஞ்செய்து கொண்டிருந்த நைனியப்பப் பிள்ளை, அவ்வூரை விட்டுவிட்டுப் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். 1704-ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம், 24-ஆந் தேதி, வெற்றிலை, புகையிலை ஆகிய இவ்விரண்டின் குத்தகையை அவர் அரசாங்கத்தாரிடமிருந்து ஏற்றுக்கொண்டு, ஆண்டொன்றுக்கு 2400 வராகனுக (வராகன் ஒன்றுக்கு மூன்றரை ரூபாய்) இரண்டாண்டுகள் வரையில் அக்குத்தகையை நடத்தி வந்தார். 1708-ஆம் ஆண்டில் ஜவுளி வர்த்தகர்கள் தங்கள் சரக்குகளின் விலையில் நூற்றுக்குப் பன்னிரண்டு வீதம் அதிகப்படுத்தித் தர வேண்டுமென்று இந்திய கூட்டத்தாரைக் கேட்டுக்கொண்

1. Hebert

டார்கள். அப்போது நைனியப்பப் பிள்ளை குறைந்த விலைக்கு ஜவுளிகள் கொடுப்பதாகத் தாம் ஒப்புக்கொண்டு, அவ்வாறே கொடுத்துதவினார். சிறிது காலஞ் சென்றபின் இந்திய குழுவினரிடமிருந்த பவழங்களை விற்க நேர்ந்தது. அப்போது அக்குழுவின் துவிபாஷியாராயிருந்த இந்திய கிறிஸ்தவரான லஜார் தெ மோட்டா[1] என்னும் தானப்ப முதலியார் என்பவரால் அப்பவழங்களை விற்க முடியாது போயிற்று. அதுகாலை நைனியப்பப் பிள்ளை அப்பவழங்களை விற்றுத் தருவதாக உடன்பட்டு, அவ்வாறே விற்றுத் தந்தார். இவ்வுபகாரத்தின் நன்றிக்கு அறிகுறியாக ஹெபேர், லஜார் தெ மோட்டாவுக்குப் பதிலாக நைனியப்பப் பிள்ளையை இந்திய குழுவின் துவிபாஷியாராக 1708-ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 18-ஆம் தேதி நியமனஞ் செய்தார். இந்நியமனம் வெகு சிலாக்கியமாயிருந்தது. அந்நாளில் வியாபாரம் விருத்தியடைந்தும் இந்துக்கள் தொகைபெருகியும் இருந்ததால், ஓர் இந்தியரைத் துவிபாஷியாராக நியமித்தது அக்குழுவினரின் வேலைகளுக்குப் பெருந்துணையாயிற்று. மேலும், நைனியப்பப் பிள்ளை அப்பதவிக்குப் பெரிதும் பொருத்தமானவராயிருந்தார். ஹெபேர் நைனியப்பப் பிள்ளையைப் பற்றிப் பேசும்போது, "அதிக செல்வாக்குள்ளவரும், அறிவிற் சிறந்தவருமான நைனியப்பப் பிள்ளை" என்று குறிப்பிடுவதே அவரது உயர்வைத் தெற்றெனத் தெரிவிக்கிறது.

1. Lazar de Motta

14-ஆம் லுய்[1], சிவன் விஷ்ணு கோவில்கள் தவிர, மற்ற இந்துக்களுக்குரிய ஆலயங்கள் யாவையும் மூடிவிட வேண்டுமென்றும், நைனியப்பப் பிள்ளை ஆறு மாதத்திற்குள் கிறிஸ்தவ மதத்தைத் தழுவாவிட்டால், அவரை விலக்கி அவர் பதவியில் ஒரு கிறிஸ்தவர் நியமனஞ் செய்யப்படுவாரென்றும் பிரான்ஸ்தேசத்திலிருந்து உத்தரவு பிறப்பித்தார்.

இந்திய குழுவின் செயலாளர்கள் இவ்வித உத்தரவினுல் புதுச்சேரியில் அவர்களுக்குப் பெரிதும் இடையூறு நேருமென்று அஞ்சிச் சிறிது காலம் அவ்வுத்தரவை விளம்பரப்படுத்தாமல் வைத்திருந்தார்கள். மேற்கண்ட உத்தரவு பகிரங்கப்படுத்தப்பட்டால், இந்து சமூகம் முழுவதுமே புதுச்சேரியை விட்டு வெளிச் சென்றுவிடுமென்பது அவர்களுக்குத் தெரியும். ஆகவே, அவர்கள் கவர்னரைக் கலந்துகொண்டு தங்கள் ஆலோசனைச் சபையில் தந்திரமானதொரு முடிவு செய்தார்கள்: நைனியப்பப் பிள்ளை புரிந்துள்ள அரிய பெரிய உபகாரங்களையும், அவர் அறிவின் முதிர்ச்சியையும், வேலைத் திறனையும் பலரறியப் பாராட்ட வேண்டுமெனவும், அவரோடு அவர் வேலைகளுக்கு அனுகூலமாக உதவிப் பிரதானிகர் ஒருவரை நியமிக்க வேண்டுமென்றும், அவ்வுதவிப் பிரதானிகர் கிறிஸ்தவராயிருத்தல் வேண்டுமென்றும் அவர்கள் தீர்மானித்தார்கள்.

இந்திய குழுவினர் கவர்னரோடு செய்த முடிவை அமுலுக்குக் கொண்டுவர ஆரம்பித்த

1. Louis XIV

போது இந்துக்கள் ஆற்றொணு ஆத்திரமடைந்தார்கள். கிறிஸ்தவர்களின் தூண்டுதலின்மேல் துய்லிவியே 1715–ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 4-ஆம் தேதி நடக்கவிருந்த இந்துக்கள் உற்சவத்தைத் தடைப்படுத்திவிட்டார். ஆகவே, இந்தியர் அனைவரும் புதுச்சேரியினின்று புறப்பட்டு வேற்றூர் சேர்ந்தனர். நான்கு நாட்கள் வரையில் நகரம் மனித சஞ்சாரமின்றிப் பாழடைந்த தோற்றத்தோடிருந்தது. இதனைக் கண்ட துய்லிவியே, இந்துக்களின் மதக் கோட்பாடுகளில் இனி எவ்வகைக் குறையும் நேரா வண்ணம் அவர்களுக்கு வேண்டுவன செய்து கொடுக்கப்படும் என்று உறுதி கூறி, அதைத் தெளிவாகப் பிரசித்தப்படுத்தினர். ஊரினின்று வெளியேறிய குடி மக்கள், மறுபடி புதுச்சேரிக்குத் திரும்பினர்கள். பிரான்ஸ் நாடு சென்ற ஹெபேர், கிறிஸ்தவ குழுவினரோடு இனி ஒத்துழைப்பதாக வாக்குறுதி தந்ததன்மேல் 14-ஆம் லூயின் அபிமானம் பெற்றுப் புதுச்சேரிக்கு மீண்டும் அனுப்பப்பட்டார்.

**அடாத குற்றச்சாட்டு**

புதுச்சேரிக்கு வந்ததும் ஹெபேர், தாம் பெரிதும் மதித்திருந்த நைனியப்பப் பிள்ளையை எவ்வழியிலேனும் துரத்திவிட வேண்டும் என்று எண்ணினர். அதனல், அவர் 1715-ஆம் ஆணடு பிப்பிரவரி மாதம் 4-ஆந் தேதி நடந்த சம்பவத்தில் ராஜ துரோகக் குற்றஞ் செய்ததாகக் கற்பனை செய்து, நைனியப்பப் பிள்ளையையும், அவரைச் சேர்ந்த தனவந்த இந்துக்களையும சிறைப்படுத்தினர். பின்பு, தாமும்

உடனிருந்த ஒரு விசாரணைக் கூட்டத்தாரால், நைனியப்பப் பிள்ளைக்குத் திறந்த ஒரு பொது வெளியில் கசையடி கொடுக்க வேண்டுமென்றும், அவர் 8800 வராகன் அபராதம் தரவேண்டும் என்றும், மூன்றுண்டு சிறைச் சாலையிலிருக்க வேண்டுமென்றும், அதன் பிறகு அவர் நாடு கடத்தப்பட வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறச் செய்தார்.

இத்தீர்ப்பு நிறைவேற்றத்தின் கொடுமையைக் கண்ட சேன்மலோ[1] வர்த்தகர்கள் நைனியப்பப் பிள்ளைக்கு உதவி புரிய வந்தார்கள். அவர்களில், சிறப்பாகத் துய்ப்ளேக்ஸ் மனைவியாரின்[2] முதல் நாயகராகிய ழாக் வேன்சான்[3] மிகத் தீவிரமாக வேலை செய்தார். பிரதானிகர் நைனியப்பப் பிள்ளை, தம் வழக்கைப் புனராராய்ச்சி செய்தல் வேண்டுமென்று அரசருக்கு விண்ணப்பம் அனுப்பினர். சேன்மலோ வர்த்தகர்களின் தலையீட்டால், நைனியப்பப் பிள்ளையை உடனே விடுவிக்க வேண்டுமென்றும், அவருக்குப் பிரதானிகர் பதவியைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்றும், பாரிஸ் நகரிலிருந்து ஹெபேருக்கு ஆஞ்ஞை பிறப்பிக்கப்பட்டது. அவ்வாஞ்ஞை 1717-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் புதுச்சேரிக்கு வந்தது. ஆனால், அது வருவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் நைனியப்பப் பிள்ளை, தாம் ஓராண்டாக அனுபவித்து வந்த சிறைச்சாலைக் கொடுமைகளுக்கு

1. Saint Malo 2. Mme. Dupleix
3. Jacques Vincent

ஆற்ருராகி, சேன் லுய் கோட்டையின்* சிறையில் உயிர் துறந்தார். அவருக்கு விதித்திருந்த அபராதம் 8800 வராகனுக்காக அவர் சொத்து அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டு அழிக்கப்பட்டுவிட்டன. ஹெபேரும் அவர் மைந்தரும் நைனியப்பப் பிள்ளையின் நகைகளையும் ரொக்கப் பணங்களையும் அபகரித்துக்கொண்டனர்.

1718-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 7-ஆந் தேதி பிரெஞ்சு அரசரால் நியமிக்கப்பட்ட விசாரணைக் குழுவினர், ஹெபேரும் அவர் மைந்தரும் இன்னல்கள் பல இழைத்திருக்கின்றனர் என்று அபிப்பிராயப்படவே, ஹெபேர் தம் பதவியினின்று நீக்கப்பட்டார்.

**ஹெபேரின் பதவி நீக்கம்**

1718-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், அப்போது அதிகாரத்திலிருந்த லா பிரேவொஸ்தியேர்[1] என்பார் ஹெபேருக்கும் அவர் மைந்தருக்கும் சொந்த

* புதுச்சேரியிலிருந்த சேன் லுய் கோட்டை, 1761-ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களால் அழிக்கப்பட்டுவிட்டது. தரையில் மறைந்து கிடந்த அக்கோட்டை வாயிற்படியின் இருப்பிடத்தைக் கண்டுபிடித்த ஆசிரியர் ழுவோ துய்ப்ரேய், 1929-ஆம் ஆண்டில் பூமியைத் தோண்டி, அதன் அஸ்திவாரங்களை வெளிப்படுத்தினர். தோண்டப்பட்ட இடம் அப்படியே விடப்பட்டு, அதன் முன் கோட்டையின் அமைப்பு விவரம் செதுக்கிய கல்லொன்று நாட்டப்பட்டிருக்கிறது. இவை புதுச்சேரிக் கவர்ன்மெண்டு மைதானத்தின் தென்கிழக்கு மூலையில் இருக்கின்றன.

1. La Prevostiere

மான உடைமைகளைக் கைப்பற்றி, முத்திரையிட்டார். இது செய்யப்படுவதற்கு முன் ஹெபேருக்குப் பிரான்ஸ் தேசத்திலிருந்து கிடைத்த ஓர் இரகசியக் கடிதத்தினுல், அவர் தமக்குத் தீங்கு தரக் கூடிய பத்திரங்கள், கடிதங்கள் முதலிய யாவற்றையும் அழித்துவிட்டதுமன்றி, தம் சொத்துகளில் பலவற்றைச் சென்னையில் பத்திரப்படுத்திவிட்டார்.

முன் சொன்ன விசாரணைக் குழுவினர், நைனியப்பப் பிள்ளையைப் பற்றிப் புனர் விளக்கஞ் செய்து, அவர் எவ்விதத்திலும் குற்றம் புரிந்தவரல்லர் என்று தீர்மானித்தனர்.

இத்தீர்மானம் காலஞ்சென்ற நைனியப்பப் பிள்ளையைப்பற்றி எவ்விதப் பழிச்சொல்லுமின்றி எவரும் அவரைப் பெருந்தூய்மையாளரென்று எண்ணக் கருவியாயிற்று.

**குருவப்பப் பிள்ளை**

அதன் பின்னர்ப் பலர் யோசனையின்மேல் தம் குடும்பத்திற்கு நேர்ந்த நட்டங்களை ஈடுபடுத்திக் கொள்ள நைனியப்பப் பிள்ளையின் மூத்த குமாரர் குருவப்பப் பிள்ளை, பிரான்ஸ் தேசம் செல்ல முடிவு செய்தார்; அது குறித்துத் தம் அம்மானுரான திருவேங்கடப் பிள்ளையிடத்திலும், தம் சிறிய தந்தையாராகிய நல்லதம்பி பிள்ளையிடத்திலும் அனுமதி வேண்டினுர். அவர்கள் தங்கள் குடும்பத்துக்கு இழைக்கப்பட்ட அநீதியை எவ்வாற்ருனும் போக்கிக்கொள்ள வேண்டுமென்றும், பிரான்ஸ் தேசத்தில் அரச மன்றத்திலே ஒருகால் நீதி வழங்கப்படலாமென்றும் எண்ணி, அவ

ருக்கு அனுமதி தந்தார்கள். குருவப்பப் பிள்ளை இளைஞராயிருந்தும், தீரமும் திறமும் மிகுதியும் பெற்றிருந்தாராதலின், உடனே அவர் பிரான்ஸ் தேசம் செல்வதற்குப் பிரயாணமானார். ஆனால், அத்தருணம் புதுச்சேரியினின்று நேரே பிரான்ஸ் தேசம் செல்வதற்குத் தகுதியான கப்பல் ஒன்றும் இல்லை. எனவே, அவர் சென்னைக்குச் சென்று, ஆங்கிலக் கப்பலொன்றில் 1719-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் பிரான்ஸ் தேசத்தை நோக்கிப் புறப்பட்டுவிட்டார்; பிரான்ஸ் தேசத்திற்குப் புறப்படு முன், தாம் செய்யப் போகும் யாத்திரையைப் பற்றியும், அதன் நோக்கத்தைக் குறித்தும் பிரெஞ்சிந்திய அரசாங்க உயர் சபைக்கு ஓர் அறிக்கை விடுத்தார். அவ்வறிக்கையின் மூலம் தமக்காகவும், தம் இளைய சகோதரர்களாகிய முத்தியப்பப் பிள்ளை, வேங்கடாசலப் பிள்ளை என்பவர்களுக்காகவும் தாம் நீதி வேண்டுவதாகவும், தமது பயணத்தினால் ஏற்படக்கூடிய செலவு அனைத்தும் ஹெபேரையும் அவர் மைந்தரையும் சாருமென்றும் வெளிப்படுத்தினர்.

குருவப்பப் பிள்ளை பிரான்ஸ் தேசம் சென்று சேர்ந்தபோது சேன்மலோ வர்த்தகர்கள் அவருக்குப் பேராதரவு காட்டினார்கள். வெர்சேல்ஸ் அரச மன்றத்திலிருந்த பெரிய உத்தியோகஸ்தர் பலர் குருவப்பப் பிள்ளைக்குத் தமது அனுதாபத்தைத் தெரிவித்து, அவருக்கு வேண்டுஞ் சகாயத்தைச் செய்ய முன் வந்தனர். பிலிப் தொர்லேயான்[1] என்பாரும் குருவப்பப் பிள்ளையின் காரி

1. Philippe d'Orleans

யத்தில் மிகவும் அக்கறை கொண்டு அவரை ஆதரித்தார். இங்கிலைமையில் அரசரின் ஆலோசனைச் சபை, குருவப்பப் பிள்ளையின் முறையீடுகளைப் பரிசிலனை செய்து, குருவப்பப் பிள்ளையின் குடும்பத்தாருக்கு இந்திய குழுவினர் 10,060 வராகன் கொடுக்கவேண்டுமென்று தீர்ப்புச் செய்தது. இத் தொகை ஹெபேர் நைனியப்பப் பிள்ளையின் சொத்துகளை அநீதி முறையில் கைப்பற்றி விற்றுச் சேர்த்ததாகும். குருவப்பப் பிள்ளை பாரிஸ்[1] நகரத்திலேயே 1904 வராகன் பெற்றுக்கொண்டார். மற்றதைப் புதுச்சேரியில் அவரும் அவர் சகோதரர்களும் 1723-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 26-ஆந் தேதி பெற்றுக்கொண்டார்கள். எனினும், அவர்கள் சொத்து முழுதும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

**வெற்றியும் பதவியும்**

குருவப்பப் பிள்ளை பிரான்ஸ் தேசத்தில் வெற்றி பெற்றபின் அவர் அங்கேயே 15-ஆம் லுயினல்[2] 'சேன் மிஷேல் குதிரை வீரர்'[3] என்னும் பட்டம் அளிக்கப் பட்டுக் கௌரவிக்கப்பட்டார். அவர் 1722-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 16-ஆந் தேதி கிழக்கிந்திய கூட்டத்தினருக்குச் சொந்தமான கப்பலொன்றில் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். அவர் பிரெஞ்சு கிழக்கிந்திய புதுக் குழுவினருக்குத் தரகராயும், சுதேச மக்களுக்குத் தலைவராயும் நியமிக்கப்பட்டார். அவர் தம் தந்தையார் நைனியப்பப் பிள்ளையைப் போலவே அவ்வுத்தியோகத்தை வெகு திறமையாயும் சாதுரியமாயும் நடத்தி வந்தார். அதன் பிறகு 1724-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 12-ஆந் தேதி தமது இளமைப் பிராயத்திலேயே அவர் காலஞ் சென்றார்.

1. Paris 2. Louis XV 3. Chevalier de St. Miche

## 12. சந்ததியார்

ஆனந்தரங்கப் பிள்ளை கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் ஒருங்கே சேரப்பெற்ற செங்கற்பட்டுச் சேஷாத்திரி பிள்ளை என்பவரின் புதல்வியாராகிய மங்கைத்தாயம்மையாரை மணந்து கொண்டார். அவ்வம்மையார் அழகிலும் குணத்திலும் சிறந்து விளங்கினர். ஆனந்தரங்கப் பிள்ளையே, அவ்வம்மையாரை "இலக்குமியைப் போன்ற அழகுடையவள்," என்று கூறியிருக்கிறார். கணவர் கருத்துக்கு ஒத்து இல்லறத்தை நல்லறமாக அவர் நடத்தி வந்தமை, இதற்கு முன் குறிப்பிட்ட வீட்டுச் சடங்குகளில் அவ்வம்மையார் தம் கணவர் சொற்படி ஒழுகிக் காட்டியதே சான்றாகும். அவ்வம்மையார் இரு புதல்வரையும், மூன்று புதல்வியரையும் ஈன்றனர். ஐயாசாமி, அண்ணுசாமி என முறையே அவ்விரு புதல்வரும் வழங்கப் பெற்றனர். பாப்பா, காளத்தி, இலட்சுமி என்பன புதல்வியரின் பெயர்கள். ஆனந்தரங்கப்பிள்ளை உயிருடனிருக்கும்பொழுதே, 1756-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 18-ஆந் தேதி அவர் மனைவியார் மங்கைத்தாயம்மையார் இறந்தார்.

ஆனந்தரங்கப் பிள்ளை, தம் புத்திரர் இளைஞராயிருந்ததால், தம் சகோதரர்களின்* பிள்ளைகளையே தமக்கு உதவியாக வைத்துக்கொண்டிருந்தார்.

---

* அச்சகோதரர்களில் இளையவர் பெயர் திருவேங்கடப் பிள்ளை என்பது. அவர் 1754-ஆம் ஆண்டு

அவர்களில் ஒருவராகிய திருவேங்கடப் பிள்ளை என்பவரே அவருடைய இறுதிக்காலத்தில் அவருடனிருந்து அவருக்கு வேண்டுவன செய்துவந்தார். ஆனந்தரங்கப் பிள்ளைக்குப் பின் அவர் பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தில் உத்தியோகம் பெற்று, அதனை நன்மதிப்புடன் நடத்தி வந்தார். அவருக்குப் பின் தோன்றின பலரில் பெரும்பாலார் திருவேங்கடப் பிள்ளை என்னும் பெயரையே உடையவராயிருந்தாரென்பது தெரிகிறது.

ஆனந்தரங்கப் பிள்ளையின் குடும்ப வழியிற் றோன்றிய வஜாரதராய முத்து விஜய திருவேங்கடப் பிள்ளை என்பவர், 1816-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2, 4 தேதிகளில் புதுச்சேரிக் கவர்னர் துய்ப்புய்க்குக்[1] கொடுத்த விண்ணப்

---

செப்டம்பர் 8-ஆந் தேதி உயிர் துறந்தார். மறுநாள் அவருடைய உடல் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஒரு தந்தப் பலலக்கில் மயானத்திற்கு எடுத்துச் செல்லப் பட்டு, சந்தனக்கட்டைகளாலாகிய சிதையில் வைத்து எரிக்கப்பட்டது. ஆனந்தரங்கப் பிள்ளை அவர்பால் பெரிதும் அன்புடையவராயிருந்தார். அவர் வாழ்வைப் பற்றியும், குண நலங்களைப் பற்றியும் ஆனந்தரங்கப் பிள்ளை மிகவும் பாராட்டுவதுண்டு. "அவன் (திருவேங்கடப் பிள்ளை) போகத்தில் இந்திரனைப் போலவும், ஈகையில் கன்னனைப் போலவும், மதியில் 'யூகி' என்னும் மந்திரியைப் போலவும், வீரத்தில் இமயம் போலவும், மாட்சியில் மாகடல் போலவும் நாற்பத்தோர் ஆண்டுகள் வாழ்ந்தான்," என்று குறிப்பிடுகிறார்.

1. Dupuy

பங்களினுல் அடியிற்காணும் செய்திகள் தெரிய வருகின்றன :

மேலே குறிப்பிட்ட முதலாம் திருவேங்கடப் பிள்ளை, 1801-ஆம் ஆண்டில் இறந்துவிட்டார். அவருக்குப் பின்னர் அவருடைய ஒரே மைந்தர் 1813-ஆம் ஆண்டில் காலஞ் சென்றுவிட்டார். அவர் இறந்துபட்ட பின் விதவையராயிருந்த அவர் தாயார் தமக்கு நெருங்கிய உறவினரான முன் சொன்ன வஜாரதராய முத்து விஜய திரு வேங்கடப் பிள்ளையைச் சுவீகாரப் புத்திரராக ஏற்றுக்கொண்டார். அவர், ஆனந்தரங்கப் பிள்ளையும் அவருக்குப் பின்னிருந்தவரும் 1745-ஆம் ஆண்டு முதற்கொண்டு புதுச்சேரியில் நாணயங்கள் அடிக்கும் பொறுப்புடையவர்களாய் இருந்து வந்ததால், அந்த உரிமையைத் தமக்கும் வழங்கவேண்டும் என்று கவர்னர் துய்ப்புய் என்பவரைக் கேட்டிருந்தார். வஜாரதராய முத்து விஜய திருவேங்கடப் பிள்ளை 1816-ஆம் ஆண்டின் இறுதியில் காலமாகியிருக்க வேண்டுமென்று நினைக்க வேண்டியிருக்கிறது. அவருக்குப் பின் நந்த ராஜராஜ முத்து வீர திருவேங்கடப் பிள்ளை என்பவர் ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதீனத்திற்குரியவராய் இருந்திருக்கிறுர். அவர் 1817-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 6-ஆந் தேதி புதுச்சேரியில் அரசாங்க நிருவாகத் தலைவராயிருந்த தயோ[1] என்பவருக்கு விண்ணப்பம் ஒன்று விடுத்துள்ளார். அதில் அவர் ஆனந்தரங்கப் பிள்ளையின் குடும்பத்திற்குத் தாமே முழு உரிமையாளர் என்றும், 1786-ஆம் ஆண்டு

1. Dayot

டிசம்பர் மாதம் 22-ஆந் தேதி அரசாங்கத்தாரால் ஆனந்தரங்கப் பிள்ளையின் குடும்பத்தாருக்கு மானியமாக விடப்பட்ட சேதுராப்பட்டு என்னும் ஊரைத் தம் வசத்தில் ஒப்படைக்க வேண்டுமென்றும், தம் முன்னோர்கள் தொடர்ச்சியாய் அவ்வூரினின்று வரும் வருமானத்தை அனுபவித்து வந்தாயும், அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வருட வரித் தொகை ஐம்பது வராகனையும் அவர்கள் தட்டாமல் செலுத்தி வந்திருப்பதாயும் குறிப்பிட்டிருந்தார்.

நந்த ராஜராஜ முத்து வீர திருவேங்கடப் பிள்ளைக்குப் பின் வந்தவர்களில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் விஜயானந்த ரங்க திருவேங்கடப் பிள்ளை. அவர் தமிழிலும், பிரெஞ்சு மொழியிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். அவருக்கு மைந்தர் இருவர் இருந்தனர். அவருள் மூத்தவர் பெயர் வஜாரதராய முத்து விஜய திருவேங்கடப் பிள்ளை என்பது. இளையவர் விஜய துரை ரங்கப் பிள்ளை என்று வழங்கப்பட்டார். அவ்விருவரும் சங்கீதத்தில் சிறந்த ஞானமுடையவராயிருந்தனர். விஜய துரை ரங்கப் பிள்ளை தமிழ்க் கல்வியோடு ஆங்கிலத்திலும் அனுபவம் வாய்ந்தவராயிருந்தார். அன்றியும், அவருக்கு இயந்திரத் தொழில் முதலியவற்றிலும் தேர்ச்சியுண்டு. புதுச்சேரியில் சோடா பானஞ் செய்யும் இயந்திரத்தை முதன்முதல் கொண்டு வந்து தொழில் கற்பித்தவர் அவரே. தமையனுருக்கு முன் அவர் இறந்துவிட்டார். அவருக்குச் சந்ததியில்லை. வஜாரதராய முத்து விஜய திருவேங்கடப் பிள்ளை 1913-

ஆம் ஆண்டு பிப்பிரவரிமாதத்தில் காலஞ் சென்ருர். அவருக்கு ஆண்டாளம்மையார் என்னும் ஒரே புதல்வியார் தோன்றினர். ஆனந்தரங்கப் பிள்ளை ஆதீனத்திற்கு உரிமையாளர் அவ்வம்மையாரே யாயினர். அவ்வம்மையாரைச் சென்னை வேங் கடகிருஷ்ணப் பிள்ளை என்பவர் மணந்து கொண்டார். அவருக்கு அமிசவல்லித்தாயார் என்னும் ஒரு பெண் மகவு மாத்திரம் பிறந்தது. அம்மகவு பிறந்த சில காலத்திற்குள் 1920-ஆம் ஆண்டில் ஆண்டாளம்மையார் இறந்துவிட் டார். அமிசவல்லித்தாயார் சென்னைக் கிருஷ்ண சாமிப் பிள்ளை என்பவரை மணந்துகொண்டு, இது போழ்து ஆனந்தரங்கப் பிள்ளை இல்லத்தி லேயே வசித்து வருகிருர். வஜாரதராய முத்து விஜய திருவேங்கடப் பிள்ளைக்குப் பின் அக்குடும் பத்தில் ஆண் சந்ததியே இல்லாமல் இரண்டு தலை முறையாகப் பெண்கள் வழியிலேயே ஆதின உரிமை இருந்து வருகிறது.

## 13. உருவப் படம்

ஆனந்தரங்கப் பிள்ளையின் உருவப் படம் ஒன்று மேல் நாட்டு வர்த்தகர் ஒருவரால் வரையப் பட்டு அவரது படுக்கை அறையில் வைக்கப்பட்ட தென்று முன்னே கூறியுள்ளோம். இப்போது ஆனந்தரங்கப் பிள்ளையின் இல்லத்திலே மேல் மாடியில் கூடத்தின் நடுவில் ஓர் உருவப் படம் வைக்கப்பட்டிருக்கிறது. அவ்வுருவப் படமே, முன் சொன்ன வர்த்தகரால் வரையப்பட்ட தென்று பிள்ளையின் சந்ததியார் கூறுகின்றனர். இது தலைமுறை தலைமுறையாகவும் கர்ண பரம் பரையாகவும் கூறப்படுவதாகும். அவ்வுருவப் படம் அளவில் பெரியதாயிருப்பதனுல் அது பற்றிச் சொல்லப்படும் வரலாற்றுக்குப் பொருத்த முள்ளதாகக் காணப்படுகிறது. அப்படத்தி னின்று நம்மால் 1939-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் எடுக்கப்பட்ட புகைப் படத்தின் பிரதியே இப்புத்தகத்தின் முகப்பிலுள்ளது.

இஃது இங்ஙனமாக, 1938-ஆம் ஆண்டில் ஆசிரியர் மூவோ துய்ப்ரேய் ஆனந்தரங்கப் பிள்ளையின் உண்மையான உருவப் படத்தைக் கண்டு பிடித்ததாக, ‘லே மோந்து கொலோனி யால்’[1] என்னும் பாரிஸ் பத்திரிகை ஒன்றில் வெளியிட்டார். அதன் பின்னர்ச் சென்னை ஆங்கில தமிழ் தினசரிப் பத்திரிகைகளிலும் அது வெளியிடப்பட்டது. அப்படமே இங்குள்ளது.

1. Le Monde Colonial



ஆசிரியர் ழுவோ துய்ப்ரேய் வெளியிட்ட படம்

[பக்கம் 100]

ஆசிரியர் மூவோ துய்ப்ரேய் வெளியிட்டுள்ள இப்படம் உருவத்தில் முகப்புப் படத்தின் வேறு படுவதாகத் தோன்றினும், இதுதான் ஆனந்த ரங்கப் பிள்ளையின் உண்மை உருவமென்று அவர் அழுத்தமாகக் கூறுகிறார். இப்படத்தில் காணப் படும் இரண்டு தங்கச் சங்கிலிகளில் சிறியதாயிருப் பதில் தொங்கும் பதக்கத்தில் 14-ஆம் லூயின் உருவம் இருப்பதும், அச்சங்கிலியைப் பற்றிப் பிள்ளையின் நாட்குறிப்புகளில் கூறப்பட்டிருப் பதும், கையிலுள்ள பிடி போட்ட கைத்தடியும், இடையில் காணப்படும் வாளும் அவர் கூற்றுக்குப் போதிய சான்றுகளெனச் சாற்றுகிறார். ஆனந்த ரங்கப் பிள்ளையின் வீட்டிலிருக்கும் படத்தில் கைத்தடி வாள் முதலியன காணப்படினும், 14-ஆம் லூயின் உருவத்தோடு கூடிய சங்கிலி காணப் பெருமையாலும், அச்சங்கிலியே சிறப் பாகப் பிள்ளைக்கு உரியதாகையாலும் அச்சங்கிலி யோடு காணப் பெறும் படத்தையே அவரது உண்மையான படமெனக் கொள்ள வேண்டும் என்பது மூவோ துய்ப்ரேயின் கருத்து. படத்தில் காணும் தாடியைப் பற்றித் தெளிவான விவரம் அவர் தெரிவியாது போயினும், தாடி இருப் பதனுல் உருவம் இந்து மதத்தினருடையதன் றென்று துணிவது கூடாதென்றும் கூறுகிறார்; மேலும், அவ்வுருவத்தில் காதணி காணப்படு வதால், காது குத்தி அணி அணியும் வழக்கம் இந்துக்களுக்கே சிறப்பாய் இருந்து வருவதால், அப்படம் ஓர் இந்துவின் படமேயன்றி மற்ற மதத்தினர் படம் அன்று என்றும் பகர்கிருர்.

இப்படம் புதுச்சேரி திரு. கலுவா மொம்பிரேன் வீட்டில் பழைய சாசனங்களோடு இருந்ததாகவும், இதனை இந்நாள் வரையில் எவரும் பார்த்து ஆராய்ந்து வெளிக்குக் கொண்டு வரவில்லையென்றும் தெரிகிறது. 1939-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் நாம் திரு. மொம்பிரேன் அவர்கள் இல்லத்திற்குச் சென்று, அவர் உதவியால் இப்படத்தைப் பார்க்க நேர்ந்தது. இப்படத்தில் திரு. மூவோ துய்ப்ரேய் வெளியிட்டுள்ள உருவம் மாத்திரம் தனியாய் இல்லை. தடித்த காகிதத்தில் கையினால் முற்கால ஓவியக்காரர்கள் கைவேலை போன்ற வர்ணப் படமொன்று வரையப்பட்டிருக்கிறது. இரண்டு தூண்களுள்ள ஒரு விமானம் அல்லது மேடையின்மீது முழு உருவத்துடன் ஒருவர் உடை, வாள், கைத்தடி, சங்கிலி முதலியவை அணிந்துகொண்டு, நின்ற நிலையில், வலப்புறத்தில் கீழே நின்றுகொண்டு கையேந்தும் ஒருவருக்கு ஏதோ தானம் கொடுப்பது போலவும், சேவகன் உடை போன்ற ஆடையணிந்த ஒருவர் இடப்புறத்தில் நின்றுகொண்டு சாமரம் வீசுவது போலவும் அப்படத்தில் காணப்படுகிறது. மேடைக்கருகில் சிறு நாயொன்று நிற்பது போலவும் எழுதப்பட்டிருக்கிறது. அப்படம் ஒரு தடித்த வெள்ளைக் காகிதத்தின்மேல் ஒட்டப்பட்டிருக்கிறது. அந்த வெள்ளைக் காகிதத்தில் படத்திற்குக் கீழ், படத்தின் இடக்கோடியிலிருந்து வலக்கோடி வரையில் பிரெஞ்சு மொழியில் ஆனந்தரங்கப் பிள்ளை என்னும் பெயர் வரையப்பட்டிருக்கிறது. படம் எழுதிய காகிதத்

திலேயே அப்பெயரும் எழுதப்பட்டிருக்குமாஞல் ஆசிரியர் மூவோ துய்ப்ரேயின் கூற்று இன்னும் வலிமை பெறும்.

புதுச்சேரியிலுள்ள நாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளரிற் சிலர், மேலே குறித்த படம் ஆனந்தரங்கப் பிள்ளையினுடையதன்றென்றும், அது, இதற்கு முன் கூறப்பட்டுள்ள லஜார் தெ மோட்டா என்னும் தானப்ப முதலியாரின்[1] உருவப் படம் என்றும் கூறுகின்றனர். பெதரோ கனகராய முதலியார் பிரெஞ்சு கிழக்கிந்திய கூட்டத்தாருக்குச் செய்த உதவியை முன்னிட்டு அவருக்குப் பிரான்ஸ் தேச அரசரின் உருவம் அமைந்த தங்கப் பதக்கம் ஒன்றும், தங்கச் சங்கிலி யொன்றும் கொடுக்கப்பட்டதாகக் கூறுகின்றனர். அப்பதக்கமும் சங்கிலியுந்தான் முன் சொன்ன படத்தில் காணப்படுவன என்று கழறுகின்றனர். பெதரோ கனகராய முதலியார் கிறிஸ்தவ மதத்தினராதலால், தாடியுடன் தோன்றுவதும், பண்டைய கிறிஸ்தவர்கள் வழக்கப்படி காதணி அணிந்திருப்பதும் இயற்கையாமென்று இயம்புகின்றனர். ஆனந்தரங்கப் பிள்ளை வீட்டில் இருக்கும் படத்தில் நெற்றியில் திருமண் அணியப்பெற்றிருப்பதும், ஆசிரியர் மூவோ துய்ப்ரேய் வெளியிட்ட படத்தில் நெற்றிக்குறியொன்றும் இல்லாதிருப்பதும் குறிப்பிடத் தக்கன. ஆனந்தரங்கப் பிள்ளை வைணவ பக்தரென்றும், ஆழ்ந்த மதப் பற்றுடையவரென்றும் நாம் அறிதல் வேண்டும். எனவே, அவர் எஞ்ஞான்றும் நெற்றியில் திருமண் அணியப்பெற்றுக் காணப்படுவதுதான் அமைவு உடையதாகும்.

---

1. Pedro Kanagaraya Mudaliar

## 14. கையெழுத்து

ஆனந்தரங்கப் பிள்ளையின் கையெழுத்து எவ்வாறு இருந்ததென்பதை இதுவரையில் எவரும் அறிந்துகொள்ள இயலாதிருந்தது. 1940-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஆசிரியர் மூவோ துய்ப்ரேய், அவருடைய கையெழுத்தைக் கண்டு பிடித்தார். புதுச்சேரி அரசாங்கப் புத்தகசாலையில் பாதுகாத்து வைக்கப் பெற்றுள்ள பழைய சாசனங்களிலொன்றில், அக்கையெழுத்து இருப்பதை அவர் கண்டார்.

அக்கையெழுத்துத் தமிழில் ஆனந்தரங்கப்பன் என்று இடப்பட்டிருக்கிறது. அதன் பக்கத்தில் பிரெஞ்சு மொழியில் துய்ப்ளேக்ஸின் கையெழுத்தும், அதனடியில் வேறு சில கையெழுத்துகளும் இருக்கின்றன. இவையெல்லாம் பிரெஞ்சு மொழியில் எழுதிய ஓர் ஒப்பந்தப் பத்திரத்தின் கீழ் இடப்பட்ட கையெழுத்துகளாகும்.

பிள்ளை அவர்களை ஆனந்தரங்கன் என்றும், ஆனந்தரங்கப்பன் என்றும் வழங்குவதுண்டு என்பதை நாம் அறிதல் வேண்டும். புலவர்கள் அவரைக் குறிப்பிடும் போதெல்லாம் ஆனந்தரங்கன் என்றே குறிப்பிட்டுள்ளார்கள். ஆனந்தரங்கப்பன் என்று சிலர் அவரை வழங்கியதற்கும் சான்றுகள் பல உள. ஆனந்தரங்கப் பிள்ளையே தமது நாட்குறிப்புகளில் ஓரிடத்தில் எலியாஸ்[1] என்பவர் தம்மை அழைத்துக் கூறினவற்றைக்

1. Elias

குறிக்கும்போது பின் வருமாறு எழுதியுள்ளார்: "எலியாஸ் என்னைக் கூப்பிட்டார். ரங்கப்பா, நான் சீனத்துக்குப் போகிறேன்........................ .........என்றார்."

இதுவன்றி, 1755-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 29-ஆந்தேதி தெலெரித்துக்கு ஆனந்தரங்கப்பிள்ளை கடிதம் ஒன்று எழுதியுள்ளார். அக்கடிதத்தின் இறுதியில் 'ரங்கப்பன்' என்று பிரெஞ்சு மொழியில் கையொப்பமிட்டுள்ளார். ஆகவே, ஒப்பந்தப் பத்திரத்தில் ஆனந்தரங்கப்பன் என்று எழுதப்பட்டிருக்கும் பெயரைக் குறித்து ஐயுற வேண்டிய அவசியமில்லை. அப்பெயருக்கு அடுத்து ஒரே மதிப்புடையதாய துய்ப்ளேக்ஸின் கையெழுத்து இருப்பதையும் நாம் மனத்திலிருத்த வேண்டும். துய்ப்ளேக்ஸுக்குச் சமத்துவ நிலையிலிருந்து அரசாங்க ஒப்பந்தப் பத்திரத்தில் அவரோடு கையெழுத்துப் போடக் கூடியவர் ஆனந்தரங்கப் பிள்ளையையன்றி வேறெவர் இருந்திருக்க முடியும்?

'பிள்ளை அவர்கள் பிரெஞ்சு மொழி அறிந்திருந்தும், பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்ட ஒரு பத்திரத்தில் தம் கையெழுத்தை அம்மொழியில் இடாது தமிழ் மொழியில் இடுவானேன்?' என்னும் வினா எழவும் கூடும். பெரும்பாலும், தமிழ் மொழியில் எழுதும் வழக்கத்தினாலும், தம் தாய் மொழியாகிய தமிழ் மொழியிடத்தில் அவர் கொண்டிருந்த பற்றின் மிகுதியாலும் அங்ஙனம் செய்திருக்கலாமென்று சாற்றலாம். அவர் தமிழ்ப் புலவர்களைப் போற்றியும், தமிழைப் புரந்தும் வந்தமையே இதற்குச் சான்றாகும்.

## 15. புராதனப் பொருள்கள்

ஆனந்தரங்கப் பிள்ளைக்குப் பின் அவருடைய கௌரவச் சின்னங்கள், விலையுயர்ந்த அணிகள், அவர் வீட்டிலிருந்த புராதனப் பொருள்கள், இன்னோரன்ன பிறவும் அவருடைய சந்ததியார் வைத்துப் போற்றி வந்தனர். ஆண்டுகள் பல சென்றுவிடவே, அவர்கள் மேற்குறித்த பொருள்களின் மதிப்பை அறியாமல், ஒவ்வொன்றாக இழந்துவிடலானார்கள். சரித்திர ஆராய்ச்சியாளர்கள், தங்கள் ஆராய்ச்சியின் நிமித்தம் பிரெஞ்சிந்தியாவில் நுழையும்போதே அவர்கள் ஆனந்தரங்கப் பிள்ளையின் மாளிகைக்குச் சென்று, அங்குள்ளவற்றைப் பாரா திருப்பதில்லை. ஐரோப்பியர்கள், சிறப்பாகப் பிரெஞ்சுக்காரர்கள், ஆனந்தரங்கப் பிள்ளையின் மாளிகையைப் பார்வையிடுங்கால் அதிலுள்ள புராதனச் சின்னங்களையும், பொருள்களையும் தங்களுக்குக் கொடுத்துவிடும்படி அவருடைய சந்ததியாரிடம் நயம்படக் கேட்டுப் பெற்றுக்கொள்வதுண்டு. இங்ஙனம் ஒன்றன் பின் ஒன்றாகப் பல பொருள்கள் ஆனந்தரங்கப் பிள்ளையின் ஆதீனத்திலிருந்து இப்போது ஐரோப்பாவிற்குச் சென்றுவிட்டன. ஆனந்தரங்கப்பிள்ளை வைத்திருந்த நாற்காலி முதலிய பொருள்கள் பாரிஸ் நகரத்தில் இன்று காட்சி அளிக்கின்றனவேயன்றி, இந்திய மக்கள் பார்க்கும் வண்ணம் அவை இந்நாட்டில் இப்போதில்லை. சமீப காலத்தில் கூட 1938-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஆசிரியர் மூவோ துய்ப்ரேய்



*By courtesy of Mme. Robert Gaebele*

பிள்ளையவர்களின் பதவிச் சின்னங்கள் [பக்கம் 107]

ஆனந்தரங்கப் பிள்ளையின் இல்லத்திலிருந்த கொடி யொன்றை அங்கிருந்து பெற்றுப் பாரிஸ் நகரத்தின் காட்சிச்சாலைக்கு அனுப்பியுள்ளார்.

இவ்வாறு பல வழியிலும் ஆனந்தரங்கப் பிள்ளை குடும்பத்திலிருந்த புராதனப் பொருள்கள் அக்குடும்பத்தினின்று வெளிச்சென்றன போக மீதி இருப்பவை ஒரு சிலவே. அவற்றுள் சிறப்பாகக் குறிக்கத் தக்கவை, கிழக்கிந்திய கூட்டத்தாரால் அளிக்கப்பட்ட தங்கப்பிடியுள்ள கைத்தடியொன்றும், மரகதத்தினுலாய கட்கமொன்றும், தந்தத்தினுல் செய்யப்பெற்ற சதுரங்கமொன்றும், சித்திர வேலைப்பாடுடைய அலமாரிகள் இரண்டும் ஆகும். தங்கப் பிடிக் கைத்தடியும், மரகதக்கட்கமும், தந்தச் சதுரங்கமும் விலை மதிப்புள்ளனவாகையால், அவை பத்திரமாகக் காக்கப்பட்டு வருகின்றன. சித்திர அலமாரிகள் இரண்டும் ஆனந்தரங்கப் பிள்ளையின் இல்லத்தின் மேல் மாடி நடுக் கூடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. அவை இரண்டும் ஒரே விதமாய்ச் செய்யப் பெற்றிருக்கின்றன. மேல் பாகத்தில், முன் புறத்திலும் இரண்டு பக்கங்களிலும் மரம் செதுக்கப்பட்டிருக்கிறது. அப்படிச் செதுக்கப்பட்ட இடங்களிலே தந்தத்தினுல் செடி கொடிகளும், குன்றுகளும் போன்ற உருவங்கள் செய்யப்பெற்றுப் பொருத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. அச்செடி கொடிகளின் மேல் பறவைகள் உட்கார்ந்திருப்பது போலவும், குன்றுகளின்மேல் சிங்கம், புலி, மான் முதலிய மிருகங்கள் உலாவுவது போலவும் சித்திர வேலை செய்யப்பட்டிருக்கிறது. மரத்தில் சாயந்

தீட்டிய ஒரு சித்திரம் போன்று அவை தோன்று கின்றனவேயன்றி, மரத்தில் தந்தத்தைப் பதிய வைத்தது போலப் பொது நோக்காகப் பார்ப்பவர் களுக்குத் தோன்றவில்லை. அவ்வலமாரிகள் இரண் டும் பண்டைக் காலத்துச் சித்திரக் கலையையும், சிற்றுளி வேலைத் திறனையும் நன்கு எடுத்துக் காட்டு கின்றன. அலமாரியின் உட்பாகங்கள் பல பல விதமாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. வளைவு அறைகளும், செருகு அறைகளும் பல இருக்கின் றன. வளைவுகளுக்கு இரு புறங்களிலும் அமைக் கப்பெற்ற சிறு தூண்கள் அழகைத் தருவனவாக மாத்திரமில்லை. அவைகளைத் தூக்கினாலும்முன்னே இழுத்தாலும் உள்ளே இரகசிய அறைகள் காணப் படுகின்றன. இப்போது இவ்வருமையான அல மாரிகள் காலத்தினால் பழைமையான நிலையிலிருக் கின்றன.

## 16. கொடி

ஆசிரியர் மூவோ துய்ப்ரேய் 1938-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஆனந்தரங்கப் பிள்ளை வீட்டிலிருந்த கொடியொன்றைப் பாரிஸ் நகரத்திற்கு அனுப்பிவைத்தாரென்று மேலே கூறினோம். அக் கொடி ஆனந்தரங்கப் பிள்ளையின் தினக் குறிப்புகளில்குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1741-ஆம் ஆண்டில் மொகலாய சக்கரவர்த்தியார் துய்ப்ளேக்ஸின்பால் கொண்டிருந்த நட்பிற்கறிகுறியாக அக் கொடியை நவாபு என்னும் பட்டத்துடன் அவருக்கு அளித்தாரென்றும், ஆனந்தரங்கப் பிள்ளை துய்ப்ளேக்ஸின் பிரதான மந்திரியாராய் இருந்தமையால், அவர் அதனைத் தாம் வெளியூர்களுக்குச் செல்லும் போதெல்லாம் தாம் ஏறிச் செல்லும் யானையின் அம்பாரியின் முன் வைத்துப் போதல் வழக்கமென்றும் கூறுகின்றனர்.

அக்கொடி முக்கோண வடிவமாய், வெண்பட்டுத்துணியில், நடுவே உதயசூரியன் போன்ற சித்திரம் வரையப் பெற்றதாய், அச்சித்திரத்தைச் சுற்றிலும் பூக்களிட்டதாயிருக்கிறது. அதிற்காணும் சூரியனும் பூக்களும் சாதாரண வர்ணம் தீட்டப் பெருமல், தங்கத் துகள்கள் பதிப்பிக்கப் பெற்றனவாயிருக்கின்றன. அக்கொடி பார்வைக்கு அழகாயும், அதிக வேலைப்பாடுடையதாயும் இருக்கிறது. இப்போது அதற்குச் சரித்திரசம்பந்தமானமதிப்பு அதிகமாக ஏற்படுவதை அறிந்து, அதனைத் தக்க

இடத்தில் பாதுகாத்து வைத்தற்பொருட்டே ஆசிரியர் மூவோ துய்ப்ரேய் ஆனந்தரங்கப் பிள்ளையின் சந்ததியாரிடமிருந்து அரிதிற் பெற்றுப் பிரெஞ்சிந்திய அரசாங்கத்தார்மூலம் பாரிஸ் நகரக் காட்சிச் சாலையிற் சேர்ப்பித்துள்ளார். அஃது அங்குப் பொன்னே போலப் போற்றி வரப்படுகிறது.



## 17. போர் நிகழ்ச்சிகளிற் சில

1746-ஆம் ஆண்டு செப்டம்பர்மாதம் பிரெஞ்சுக்காரர் சென்னையை முற்றுகையிட்டனர். துய்ப்ளேக்ஸின் யோசனையின்படி லாபுர்தொனே[1] அம்முற்றுகையை முன்னின்று நடத்தினர்.

**சென்னை முற்றுகை**

சென்னை நகரம் பிரெஞ்சுக்காரர் வசமாயிற்று. ஆனால், அந்நகரத்தைத் துய்ப்ளேக்ஸ் தம் ஆதிக்கத்திலேயே வைத்திருக்கஎண்ணவில்லை. அதனை ஆர்க்காட்டு நவாபான அன்வருதீனிடம் விட்டுவிட்டு,அதற்குப்பதிலாக வழுதாவூர் அல்லது வில்லியனூரைப் பெறக் கருதியிருந்தார்; இக்கருத்தை நவாபுக்கு வெளியிடுமாறு ஆனந்தரங்கப் பிள்ளையைக் கேட்டுக்கொண்டார். பிள்ளை அவர்கள் திடீரென்று அப்படிச் செய்வது அரச தந்திரமாகாதென்றும், இருவருக்கும் இடையில் ஒருவரைத் தூண்டி அவர் வாயிலாக, அவ்வியோசனை

1. La Bourdonnais

கூறுவது போலச் செய்ய வேண்டும் என்றும் அறிவித்தார்.

இஃது இங்ஙனமாக, அன்வருதீன் புதல்வர் மபூஸ்கான், 1746-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2-ஆந்தேதி தமது சேனையைச் சென்னைமீது ஏவினார். அப்பொழுது சென்னையைக் காப்பதற்காக லத்தூர்[1] என்பார் முந்நூறு ஆட்களுடன் அங்கு நியமிக்கப்பட்டார். துய்ப்ளேக்ஸ் அந்தக் குறைந்த சேனையைக் கண்டு சிறிது மனந்தளர்ந்தார். ஆனந்தரங்கப் பிள்ளை அவரை ஊக்கப்படுத்திப் பராதி[2]யின் தலைமையில் இருநூறு ஐரோப்பிய போர் வீரர்களையும் முந்நூறு இந்திய சிப்பாய்களையும் சென்னைக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்தார். பராதியின் படை அடையாற்றுக்கருகில் மபூஸ்கான் சேனையை எதிர்த்துப் போர்புரிந்து, அதைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தது.

மபூஸ்கான்மீதும் அன்வருதீன்மீதும் எழுந்த பகைமை துய்ப்ளேக்ஸிடத்தில் ஒரு சிறிதும் அடங்கிற்றில்லை. எனவே, அவர் அன்வருதீன் ஆளுகைக்குட்பட்ட ஊர்களைக் கொள்ளை அடிக்க வேண்டுமென்று கட்டளையிட்டார். இக்கட்டளைக்கிணங்கப் பல இடங்களில் பயிர்கள் நாசம் செய்யப்பட்டன; வீடுகள் நீக்கிரையாக்கப்பட்டன. துய்ப்ளேக்ஸின் தளகர்த்தராயிருந்த மேன்வீல்[3] என்பார் சென்னைக்கும் ஆர்க்காட்டுக்கும் இடையிலுள்ள ஊர்களை நாசம் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டார். இப்பிரதேசத்தில் துய்ப்ளேக்ஸுக்குச் சொந்தமான ஊர்களும் சில

1. La Tour 2. Paradis 3. Main Ville

இருந்தமையினால், அவற்றை அக்கொடுமையினின்றும் தப்புவித்தற்பொருட்டு ஆனந்தரங்கப் பிள்ளையை ஆலோசனை கேட்டார். அவர் கருத்துப்படி ஆனந்தரங்கப் பிள்ளையின் பெயருள்ள முத்திரை இடப்பட்ட சீட்டுகள் அத்தகைய ஊர் ஒவ்வொன்றுக்கும் அனுப்பப்பட்டன. அச்சீட்டுகளைக் கண்ட சிப்பாய்கள் அவ்வூர்களை விட்டு வேற்றிடஞ் செல்லலானார்கள்.

இம்முறை ஒரு புறமிருக்க, துய்ப்ளேக்ஸும் ஆனந்தரங்கப் பிள்ளையும் ஒன்று கூடி வேறொரு சூழ்ச்சியும் செய்தனர். அது பகைவரிடையே பிளவை உண்டாக்குவதாகும். அவர்கள் சூழ்ச்சியால் மகமதலிகான் பிரெஞ்சுக்காரர்களுடன் சேர்ந்துகொண்டார். ஆங்கிலேயர் பக்கலில் இருந்த மபூஸ்கான் இச்செய்தியை அறிந்து துய்ப்ளேக்ஸுடன் சமாதானம் செய்துகொண்டார்.

1748-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஆங்கிலேயர் புதுச்சேரியை முற்றுகையிட்டனர். அரியாங்குப்பத்திற்கருகில் போர் பல நாள் தொடர்ந்து நடந்தது. புதுச்சேரித் துறைமுகத்திலிருந்து ஆங்கிலக் கப்பல்கள் நகரின்மீது குண்டுகளைப் பொழிந்தன. துய்ப்ளேக்ஸ் ஆனந்தரங்கப் பிள்ளையைக் கொண்டு ஒற்றர்களை ஏவி, அப்போதைக்கப்போது எதிரிகளின் செயல்களையறிந்து வரலானார். அவர் ஊட்டிய ஊக்கத்தின்பயனாகப் பிரெஞ்சு சேனைகள் சிறிது திடம் கொண்டு ஆங்கிலேயர்களை எதிர்க்க முற்பட்டன. புதுச்சேரிக் கோட்டையின் வாயிற்படிக்கதவுகள்

**புதுச்சேரி முற்றுகை**

சாத்தப்பட்டுப் பத்திரமாகக் காக்கப்பட்டன. நாளுககுநாள் ஆங்கிலேயர் வேகம்தணியலாயிற்று. மழை காலமாய் இருந்ததால், மழையும் விட்டு விட்டுப் பெய்வதாயிற்று. ஆங்கிலேயர் புதுச்சேரியினின்றும் விலகி, செயிண்டு டேவிடு கோட்டையை அடைந்தனர். இம்முற்றுகையின்போது புதுச்சேரியினுள்ளிருந்த மக்கள் எல்லாம் என்றுமில்லாத் திகில் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு ஊக்கத்தையும், உறுதியையும், பாதுகாப்பையும் ஆனந்தரங்கப்பிள்ளை தந்துஊரினின்று அவர்களை வெளியே போகா வண்ணஞ் செய்து, இறுதியில் அவர்கள் அமைதியையும் ஆனந்தத்தையும் அடையச் செய்தார்.

துய்ப்ளேக்ஸை இந்தியாவினின்று பிரான்ஸ் தேசத்திற்கு அழைத்துவிட, ஆங்கிலேயர் பிரெஞ்சு அரசாங்கத்தாரிடம் செய்த முயற்சியின் பயனாகத் துய்ப்ளேக்ஸ் தம் குடும்பத்தோடு 1754-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 14-ஆம் தேதி துய்க் தொர்லயான் என்னும் கப்பலில் தம் தாய்நாட்டிற்குப் பயணமாயினர். அவர் பிரான்ஸ் தேசம் சேர்ந்ததும் சில பொய்க் குற்றங்கள் அவர்மீது சுமத்தப்பட்டு அவருடைய பெட்டிகள் பட்டயங்கள் மற்ற உடைமைகள் எல்லாம் பாதுகாப்பில் வைக்கப்பட்டன. அவரும் அவர் குடும்பத்தாரும் வறுமையின் வாய்ப்பட்டுத் துயரப்பெருக்கால் உயிர் துறந்தனர். ஒரு நூற்றாண்டுக்குப் பின் துய்ப்ளேக்ஸின் பெருநோக்கங்களும் பெருஞ்



துய்ப்ளேக்ஸ் உருவச்சிலை

[பக்கம் 115]

செயல்களும் பிரான்ஸ் மக்களுக்குத் தெளிவாய்த் தெரிய வந்தன. அவர்கள் அவருக்கு நினைவுக்குறி ஒன்று நிலை நாட்ட எண்ணினார்கள்.

1867- ஆம் ஆண்டு நவம்பர் மாதம், புதுச்சேரிக்குக் கவர்னராயிருந்த போன்தான்[1] என்பவரும் பிரெஞ்சிந்தியாவின் நிருவாகசபையாரும்பிரான்ஸ் அரசாங்கத்தாருக்கு விடுத்த வேண்டுகோளின் மேல், துய்ப்ளேக்ஸின் உருவச் சிலை ஒன்றைப் புதுச்சேரியில் அமைக்க முடிவாயிற்று. அம்முடிவின்படி அச்சிலை புதுச்சேரித் துறைமுகத்தின் முன் 1870ஆம் ஜூலை 16ல் நிறுவப்பட்டது.

துய்ப்ளேக்ஸின் வெற்றிக்கும், புகழுக்கும், அவரால் பிரான்ஸ் தேசத்திற்கு உண்டான பெருமைக்கும் துணை நின்ற திவான் ஆனந்தரங்கப் பிள்ளையைப் பிரான்ஸ் மக்கள் எட்டுணையும் எண்ணினார்களில்லை. நாட்டு மக்களேனும் அவர் மீது நாட்டங்கொண்டார்களோ எனின், அதுவுமில்லை.வரலாற்றுக் களஞ்சியமாகிய ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்புகள் கண்டுபிடிக்கப்பட்ட பின்னரே, அவரைப்பற்றிய பேச்சுகள் எழுந்தன. ஆயினும், அவர் நினைவாக இதுவரையில் எதுவுஞ் செய்யப் பெற்றதாகத் தெரியவில்லை. அரசாங்கத்தாரும் குடி மக்களுஞ் சேர்ந்து அவருக்கு நிலையான ஒரு நினைவுக்குறியை ஏற்படுத்தி வைப்பது சாலவும் நன்றாம்.

---

1. Bontemps.



## 18. நாட்குறிப்புகளிற் சில

ஆனந்தரங்கப் பிள்ளையின் தினக் குறிப்புகள் எத்தகைய வெற்றி வாய்ந்தனவென்பதை வாசகர் ஒருவாறு அறிந்துகொள்ளும்பொருட்டு அவற்றிற் சிலவற்றை ஆங்கில மொழி பெயர்ப்பினின்றோ, அல்லது பிரெஞ்சு மொழி பெயர்ப்பினின்றோ தமிழாக்கிச் சுருக்கமாகக் கீழே தருகின்றோம். தமிழ்மூலம் இப்போது எளிதில் கிடைக்காமையினால், இவ்விதஞ் செய்ய நேர்ந்ததென்பதைவாசகர் கருத்திலிருத்த வேண்டும்.

*　　　*　　　*

நள ஹு ஆவணி மீ 29 உ (10-9-1736) திங்கட்கிழமை :

ஆலம்பாரையிலிருந்து நவாபு தோஸ்தலி கான் (ஆர்க்காட்டு நவாபு) அனுப்பிவைத்த நாணயங்கள் அடிக்கும் உத்தரவு இன்று காலை 8 மணிக்குக் கிடைத்தது. அதனோடு ஒரு கௌரவ உடையும் வந்தது. கனகராய முதலியார் கூட வந்தார். அவற்றை வரவேற்பதற்காக ஓர் ஊர் வலம்

*நாணயம் அடிக்க உத்தரவும் அதற்கான செலவும்*

புறப்பட்டது. அது கோட்டைக்குள் நுழைந்தவுடனே கோட்டைச் சுவர்களிலிருந்து 21 குண்டுகள் போடப்பட்டன. துறைமுகத்திலிருந்த மூன்று கப்பல்களும் அதுபோலவே செய்தன. பிற்பகலில் உத்தரவு பத்திரம் ஒரு பல்லக்கில் வைக்கப்பட்டு மேள வாத்தியத்துடன் நகரினுள் கொண்டுவரப்பட்டது. அதனைப் பெறுவதற்காகக் கீழே காணும் தொகைகள் செலவழிக்கப்பட்டன.

நவாபு தோஸ்தலிகானுக்கு ரூபாய் 80,000

தர்பார் சன்மானம் ரூபாய் 25,000

இமாம் சாகிபுக்கு ரூபாய் 15,000

ஆக மொத்தம் ரூபாய் 1,20,000. ஏறக்குறைய 40 ஆயிரம் வராகன்கள்.

இவற்றைத் தவிர, இந்த உத்தரவைப் பெறுவதற்காக எலியாஸ்[1], மீரான்[2] என்பவர்கள் போனபோது வெகுமதிகளுக்கும் மற்றச் செலவுகளுக்கும் 40 ஆயிரம் வராகன்களும், இதுபற்றிப் பேச்சு வார்த்தை நடக்கும்போது மேற்கொண்டு சில தொகைகளும் செலவழிக்கப்பட்டன. அத்தொகைகளின் எண்ணிக்கை சரியாக எனக்குத் தெரியாமையால் அவைகளை மதிப்பாகக் குறிப்பிடுகிறேன். இப்போது லெனுவார்[3] கவர்னராய் இருப்பாரானால், இவ்வளவு பணம் செலவு செய்யவேமாட்டார்.

**காளயுக்தி ஞு சித்திரை மீ 12௳ (21-4-1738) திங்கட்கிழமை :**

---

1. Elias 2. Miran 3. Lenoir

எலியாஸ் பயணமும் பிள்ளையின் துயரமும்

இன்று காலை கவர்னரைப் பார்க்கச் சென்றேன். அவர் எலியாஸுடன் பேசிக்கொண்டிருந்தார். சிஞ்ஞார்[1] என்பவரும் அவ்விடமிருந்தார். அந்நேரத்தில் சென்னையிலிருந்து வந்த தபாலில் கவர்னருக்கு ஒரு கடிதமிருந்தது. அக்கடிதத்தில் பிரின்ஸெஸ் மேரி[2] என்னும் ஆங்கிலக் கப்பல் சென்னைக்கு வந்திருப்பதாகவும் அக்கப்பலில் பிரான்ஸ் தேசத்துச் சிநேகரிடமிருந்து கடிதமொன்று 1737-ஆம் வருடம் அக்டோபர் மாதம் 13-ஆந் தேதியிட்டு வந்திருப்பதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தது. சிஞ்ஞார் போன பிறகு கவர்னர் எலியாஸை நோக்கி, "பிரான்ஸிலிருந்து வந்த செய்திகளெல்லாம் நல்லனவாயிருக்கின்றன," என்று கூறினர்; பிறகு என் பக்கம் திரும்பினர். நான் சிறிது விலகி உட்கார்ந்துகொண்டேன். கவர்னர் எலியாஸுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்களென்பது எனக்குத் தெரியாது. பிறகு எலியாஸ், என்னைக் கூப்பிட்டு, "ரங்கப்பரே, நான் சீனத்துக்குப் போக உத்தேசிக்கிறேன். நூறு கண்டி ஈயம் வேண்டும். நாகூர், பரங்கிப்பேட்டை, மற்றும் அது கிடைக்கக்கூடிய இடங்களிலிருந்தும் வாங்கி வரவேண்டும். இதற்காக உம் ஆட்களை உபயோகப்படுத்திக்கொள்ளும். அவர்களுக்காகும் கூலியைக் கொடுத்துவிடுகிறேன்," என்று கூறினர்.

1. Signard 2. Princess Mary

அவர் போவதாகச் சொன்ன வார்த்தையை நான் கேட்ட போது என் காதில் நாராசம் விட்டதுபோன்றிருந்தது. அப்போது எனக்கிருந்த கலக்கத்தை ஏட்டில் எழுத முடியாது. நான் இவ்வளவு மனங் கலங்கினதற்குக் காரணம் என்னவெனில், லெனுவார் போன நாள் முதல் எலியாஸ் என்மீது கனகராய முதலியார் கொண்டிருந்த விரோதத்தை மனத்தில் வைத்து என்பால் எப்போதும் அன்பு பாராட்டி வந்தார். நான் சொல்லும் காரியங்கள் எல்லாவற்றையும் காது கொடுத்துக் கேட்பதுமன்றி, இன்னது செய்ய வேண்டுமென்றும் எனக்கு எடுத்துக் கூறுவார்; கவர்னராலோ, அவரது ஆலோசனைச் சபையாராலோ என் பெயர் சொல்லப்படுமானல், எனக்கு அனுகூலமாகவே பேசி வந்தார். எல்லா விதத்திலும் அவர் எனக்கு உதவியாகவே இருந்து வந்ததால், கனகராய முதலியாரின் கோபம் அதிகரித்தே வந்தது. இவற்றையெல்லாம் நினைக்கும் போது என் மனத்தில் மிக்க துன்பம் உண்டாயிற்று. எலியாஸ் சுகமாகப் பிரயாணம் செய்யவும், அவர் காரியங்களெல்லாம் சித்தி பெறவும், அவர் சீக்கிரம் ஊர் திரும்பி வரவும் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். கடவுள் அருளால் இவை யாவும் நிறைவேறும் என்பதில் சந்தேகமில்லை.

* * *

*சித்தார்த்தி ஞு ஐப்பசி மீ 9 வ (22-10-1739) வியாழக்கிழமை :*

இன்றிரவு 15 அல்லது 16 நாழிகைக்குக் கனகராய முதலியாரின் குமாரர் வெலவேந்திர

முதலியார் இறந்துவிட்டார். அவர் பிறந்தது விளம்பி ஆடு ஆவணி மீ 31 உ (12-9-1718) திங்கட்கிழமை இரவு, 23 நாழிகை ; கடக லக்கினம். ஆகையினால், அவர் இந்த உலகத்தில் வாழ வேண்டியது 21 வருடம் 1 மாதம் 1 நாள். பிறந்த காலம் கேது தசை. அப்போது அவர் தகப்பனார் தம் வேலையை இழந்தார். அதனால், அவமானமும் ஏற்பட்டது. அவர் தாம் பிறந்த ஊரை விட்டுப் போகவும் கட்டாயப்படுத்தப்பட்டார் ; வேறு பல துன்பங்களையும் அனுபவித்தார். கேது தசைக்குப் பின் சுக்கிர தசை வந்தபோது அவருக்கு எல்லாக் கௌரவமும் சுகமும் மேலுக்குமேல் ஏற்பட்டன. ஒரு ஜாதகனுக்குத் தன் இளமைப் பருவத்தில் ஏற்படவேண்டிய சுக துக்கங்களெல்லாம் அவன் தந்தையைத்தான் சேருமென்பது சோதிட நூலின் கருத்து. பிள்ளையின் ஜாதகப்படி சுக்கிர தசையில் ஏற்படவேண்டிய நன்மைகளெல்லாம் மிகப் பெரியனவாயிருந்தன. பனையூர் நாராயண ஜோசியர், பிள்ளையின் ஜாதகத்தைக் குறிக்கும்போதே சுக்கிர தசையில் கனகராய முதலியார் மீண்டும் செல்வாக்குப் பெறுவாரென்றும், அவர் பகைவர் எல்லாரும் ஒழிவார் என்றும், அவர் நல்ல அதிகாரத்திலிருப்பாரென்றும் கூறியிருக்கிறார் ; சுக்கிர தசை முடிந்து சூரிய தசை வரும்போது கனகராய முதலியார் நோய்வாய்ப்படுவாரென்றும், எல்லா நலன்களையும் இழந்துவிடுவாரென்றும் இயம்பினார். அதுபோலவே, சூரிய தசை வந்த

கனகராய முதலியார் வீட்டு நிகழ்ச்சிகள்

போது ஜாதகரே இறந்துவிட்டார். அவர் பிரேதம் வெள்ளிக் கிழமை மூன்றும் சாமத்தில் கல்லறையில் வைக்கப்பட்டது. கல்லறையில் சரிகை அங்கியும், முத்துக் குண்டலமும், கைவிரல் மோதிரமும் சவத்தினுடன் வைக்கப்பட்டன. சவத்தை அடக்கஞ் செய்து, உறவினர் வீட்டுக்கு வந்தவுடன் கனகராய முதலியாரின் மனைவியார் அணிந்திருந்த சேலை தீப்பற்றிக்கொண்டது. இரண்டு நாழிகைக்குப் பின் அவர் வீடுகளிலொன்று அதாவது அவர் குடியிருக்கும் வீட்டுக்கு மேற்கிலுள்ள வீடு தீப்பிடித்துக்கொண்டது. நூறு வராகன்கள் பெறுமான பொருள்கள் சேதமாயின. கனகராய முதலியாரின் எதிர் காலத் தீமைக்கு இவையெல்லாம் அறிகுறியென்று மக்கள் பேசலானார்கள். இறந்து போனவர் கனகராய முதலியாருக்கு ஒரே பிள்ளை. ஆசிரியரிடத்தில் நன்மாணுக்கன் எப்படி நடந்து கொள்வானோ, அப்படியே அவர் தம் தந்தையாரிடத்தில் பயபக்தியோடு நடந்து வந்தார். அதுவுமன்றித் தந்தையாருக்குக் கைகொடுக்கக் கூடிய காலத்தில் அவர் இறந்துபட்டதனால், எல்லாரும் கனகராய முதலியாரிடம் அதிக அனுதாபம் காட்டினர்.

*　　　*　　　*

*சித்தார்த்தி௵ கார்த்திகை௴ 9௳ (21-11-1739) சனிக்கிழமை:*

இன்று மாலை 5 மணிக்கு ஒரு முக்கியமான காரியம் நடந்தது. வேலையாட்களின் பழைய தலைவன், தானிருந்த வேலையில் முத்தைய பிள்ளை

நியமிக்கப்பட்டுவிட்டபடியால், பொறுமைகொண்டு, தன் ஆட்களில் ஒருவனை ஊரில் திருடும்படி ஏவிவிட்டான். அவ்வாள் பல நாளாக அக்காரியத்தைச் செய்து

திருட்டும் தண்டனையும்

வந்து, நாலைந்து மாதங்களுக்கு முன் அகப்பட்டுக் கொண்டான். அவனை அடித்துக் கேட்ட போது அவன் எல்லாச் செய்திகளையும் ஆதியோடந்தமாகக் கூறினதுமன்றி, அவன் திருட்டுகளைப் பார்த்தவர்கள் அல்லது கேள்விப்பட்டவர்களுடைய பெயர்களையும், திருட்டுப் பொருள்களை வாங்கி வைத்துக்கொண்டவர்களுடைய பெயர்களையும் சொல்லிவிட்டான். அவர்களுள் பதினைந்து, பதினாறு பேர் அவனோடு சிறைக்கு அனுப்பப்பட்டனர். ஆலோசனைச் சபை, அவர்களெல்லாரையும் விசாரித்து, திருடனையும், மேற்கூறியவர்களில் அதிக குற்றவாளிகளான ஐந்து பேர்களையும் தவிர, மற்றவர்களை விடுதலை செய்துவிட்டது. அக்குற்றவாளிகள் ஒடவி வீரப்ப மேஸ்திரி, ஒரு தட்டான், சாந்தி, பிரமன், குமரப்ப நயினார் என்பவர்கள். திருடன் பகிரங்கமாகத் தூக்கிலிடப்பட்டான். இந்தத் தூக்கு, ஊரின் மத்தியில், கடை வீதியில், நீதி மன்றத்தின்முன், மாலை ஐந்து மணிக்கு இதற்காகத் தற்காலிகமாக ஏற்படுத்தப்பட்ட தூக்கு மரத்தில் நிறைவேற்றப்பட்டது. துய்லோரேன்ஸ்[1] இதை நேரிலிருந்து கவனித்தார். மற்ற ஐவரில் ஒடவி வீரப்ப மேஸ்திரி, தட்டான் இவர்களுள் ஒவ்வொருவருக்கும் ஐம்பது சவுக்கடி கொடுக்கப்பட்டதோடு

1. Dulaurence

இவர்கள் காதுகளையும் அறுத்து, இவர்களைப் புதுச்சேரி எல்லைக்கப்பால் துரத்திவிட்டார்கள். எஞ்சி நின்ற மூவராகிய சாந்தி, பிரமன், குமரப்ப நயினார் என்பவர்கள் ஒரே வரிசையாக நிறுத்தப் பட்டு, சவுக்காலடிக்கப்பட்டார்கள். அவர்கள் தலைக்கு இருபத்தைந்து அடி வாங்கினார்கள்; அவர் கள்மீதிருந்த வேறு சில குற்றங்களுக்காக மீண் டும் சவுக்கடி தண்டனை விதிக்கப்பட்டுப் பின்பு விடுதலை செய்யப்பட்டார்கள்.

* * * *

சித்தார்த்தி ஞூ கார்த்திகை மீ 26 உ (8-12-1739)

கடந்த இரவு குறிப்பிடத் தகுந்த சம்பவம் ஒன்று நடந்தது: சவரிமுத்து முதலியார் குமா ரன் ஆசாரப்பன் நோயாயிருந்தான். அவன் வீட் டில் அவனுக்குத் துணையாக ஐயா மேஸ்திரி, கனகப்ப முதலி, அம்மையப்ப முதலி மைத்துனன், ஒரு வேளாள வாலிபன் முதலியவர் இருந்தனர். இரவு 12 மணிக்கு அனைவரும் தூங் கினபோது அவர்களில் முன் திண்ணையில் படுத் திருந்த ஒருவன், நான்கு மனிதர்கள் கையில் தடி கொண்டு நாட்டு உத்தியோகஸ்தர் ஒருவருடன் வீட்டிற்குள் நுழைவது போலவும், அவர்களில் ஒருவர் தன்னைப் புரட்டுவது போலவும் கனாக் கண்டான். அஃது உண்மை போலத் தோன்றிய தால், அவன் திண்ணையிலிருந்து கீழே விழுந்து விட்டான். ஆயுதந் தாங்கித் தோன்றிய மனிதர் கள் அவனை விட்டுவிட்டுக் கதவண்டை சென்று

பூதச்செயல்

கதவைத் தட்டினார்களாம். அப்போது வீட்டினுள் விழித்துக்கொண்டிருந்த ஐயா மேஸ்திரிக்குக் கதவு தட்டும் ஒலி நன்றாகக் கேட்டதாம். அவர் ஐந்தாறு முறை தட்டும் வரை சும்மாவிருந்து பிறகு கதவண்டை சென்று, அதைத் திறந்து, யாரென்று கேட்டாராம். எவரும் அங்குக் காணப் படாமையினால், அவர் கதவை மூடிவிட்டுத் தம் படுக்கைக்கு வந்துவிட்டார். வந்த சிறிது நேரத்தில் நோயாளியாகிய ஆசாரப்பனுக்குப் பேச்சு மூச்சு அற்றுவிட்டன. அவன் இறக்கும் தறுவாயிலிருப்பவன் போல இருந்தான். அவனை எழுப்பிப் பார்க்கும்படி அங்கிருந்தவர்கள் வைத்தியராகிய ஐயா மேஸ்திரியிடம் சொன்னார்கள். ஐயா மேஸ்திரி நோயாளியின் அருகிற் சென்று, நாடியைப் பார்க்கத் தொடங்கியவுடனே மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டார். அவர் தலை சாய்ந்துவிட்டது; கைகால் வரவில்லை. இரண்டு மூன்று பேர் அவரைத் தூக்கிக்கொண்டு அவர் வீட்டுக்குச் சென்றனர். வேளாள வாலிபன் ஒரு பெட்டியின் மீது படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். அவனை எழுப்பின போது அவன் யாதொரு பதிலும் சொல்லவில்லை; மூச்சுப் பேச்சில்லாமல் தன் உடையில் சிறுநீர் பெய்துகொண்டிருந்தான். உடனே மந்திரத்தில் தேர்ந்த லப்பை மந்திரவாதிகளில் சிலரை அழைத்து வந்தனர். இந்துக்கள் சிலர் செய்வதுபோலக் கோழி பலியும் பொங்கலும் செய்யப்பட்டன. இதனை அறிந்த கிறிஸ்தவ குருக்கள் கடிந்து பேசினார். சவரிமுத்து முதலியார் அதற்கு, "இவைகளெல்லாம் இந்தப் பிள்ளையைப்

பிழைக்க வைப்பதற்காகத்தான் செய்யப்பட்டனவேயன்றி வேறில்லை. உங்கள் பேச்சைக் கேட்டால் என் பிள்ளையை இழக்க வேண்டி வரும். ஆகையால், நான் இந்தச் சடங்குகளைச் செய்து அவனைக் காப்பாற்றினேன்," என்றார்.

* * * *

சித்தார்த்தி ஸு பங்குனி மீ 5 உ (15-3-1740) திங்கட்கிழமை:

ஆனந்தப் புரவி

என்னுடைய 'ஆனந்தப் புரவி' என்னும் கப்பல் அடியிற்கண்ட சாமான்களைஏற்றிக்கொண்டு கொழும்புக்குப் பிரயாணப்படச் சித்தஞ் செய்யப்பட்டது...............

* * * *

ரெளத்திரி ஸு வைகாசி மீ 6 உ (15-5-1740) ஞாயிற்றுக்கிழமை:

போர் விவரம்

40 ஆயிரம் அல்லது 50 ஆயிரம் குதிரை வீரர்களைக்கொண்ட மகாராஷ்டிரப் படையொன்று கண்டனூரைநோக்கி வந்தது; குடி மக்களிடத்தில் 60,000 அல்லது 70,000 ரூபாய்க்கு வரிகள் விதித்து வசூலித்துக்கொண்டு கடப்பையை முற்றுகையிட்டது. அங்கு அப்படைக்கும், அப்துல் நபி கான் குதிரைப் படைக்கும் ஒரு நாள் போர் நிகழ்ந்தது. இப்போரில் அப்துல் நபி கான் கெடுதியை எதிர்பார்த்துத் தன்னுடைய குடும்பத்தைப் பாதுகாப்பதற்காக அதை வடபெண்ணையாற்றின் மத்தியில் ஒரு தீவில் கட்டப்பட்டுள்ள ஜெண்டிக் கோட்டைக்கு அனுப்பிவிட்டான்.

இப்போது மகாராஷ்டிரர்கள் கணவாயை நோக்கிச் சமபூமியில் இறங்கிச் செல்லுவதாகத் தெரிகிறது. ஆனால், நவாபு தோஸ்தலிகான், அசன் அலி, சிட்டி ஜாஹறார், மீர் அசத்து இவர்கள் தங்கள் காலாட்படையோடும், குதிரைப் படையோடும் பகைவர்கள் வாராமல் தடுப்பதற்காக எதிர்த்து நின்றார்கள். இந்த இரகசியத்தை மேற்குத் திக்கிலிருந்த ஆதி ஆனந்த செட்டி எனக்குத் தெரிவித்தான். அவன் இதை ஒரு பனையோலையில் எழுதி, சென்ற வெள்ளிக் கிழமை இரவு அதாவது வைகாசி மீ 4 உ (மே, 13) எனக்கு அனுப்பி வைத்தான். இச்சம்பவங்களைக் குறித்து இமாம் சாகிபும் புதுச்சேரிக் கவர்னருக்குத் தெரிவித்திருந்தார். இதனால், ஊர் முழுதும் கலக்கம் கொண்டிருந்தது. செஞ்சி, வாலிகொண்டாபுரம், வ ந் த வா சி முதலிய இடங்களிலிருந்து கோட்டைத் த்ளகர்த்தர்களும், ஊர்ப் பெரியதனக்காரர்களும் எனக்குக் கடிதங்கள் அனுப்பியிருந்தார்கள். அவர்கள் மகாராஷ்டிரர்களின் துணிவைப் பற்றியும், தங்கள் பெண்டு பிள்ளைகளுக்குப் பாதுகாப்பு இடங்கள் புதுச்சேரியில் அமைக்க வேண்டுவது பற்றியும் எழுதியிருந்தார்கள். கவர்னரின் உத்தரவு பெற்று இராயலு அய்யனோடு கம்பெனிச் சிப்பாய்கள் இருவரையும் என் சொந்த ஆட்கள் ஐந்தாறு பேர்களையும் ஆர்க்காட்டுக்கு அனுப்பி என்னுடைய ஜவுளி முதலிய சரக்குகளை இங்குக் கொண்டு வந்துவிடும்படி செய்தேன்.

* * * *

ருத்திரோத்காரி ௵ மார்கழி ௴ 8 உ (19-12-1743) வியாழக்கிழமை:

முரட்டாண்டி சாவடித் தண்ணீர்ப் பந்தலிலிருந்து மாலை 4 மணிக்குக் கவர்னர் புதுச்சேரிக்கு வந்தார். அவர் புறப்படு முன் அங்குத் துய்லோரேன்ஸும், தெஸ்பிரேமேனிலும்[1] போதை அடைந்து ஒருவரையொருவர் திட்டிக் கொண்டனர். தெஸ்பிரேமேனில், துய்லோரேன்ஸை உதைத்தார். அவர் தெஸ்பிரேமேனிலைக் கைப்பிரம்பால் ஓர் அடி அடித்தார். அதற்குமேல் இருவரும் தம் வாட்களை உருவிக் கொண்டு ஒருவர் முன்னொருவர் நின்றுவிட்டனர். அங்கிருந்தவர்கள் இடையில் புகுந்து, அவர்களை விலக்கினார்கள். பிறகு அவர்கள் தங்கள் வீடுகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். இவ்விதம் நடந்துகொண்டதற்கு அவர்களுக்குள் ஏற்பட்டிருந்த பகைமை என்னவென்றறிவது அரிதாயிருக்கிறது.

**குடியால் நேர்ந்த மாற்சரியம்**

இன்று மாலை 4 மணிக்கு ஓர் அற்புதம் ஏற்பட்டது: கடந்த பத்துப் பதினைந்து நாட்களாகப் பகற்பொழுதில் ஒரு நட்சத்திரம் நன்றாகக் காணப்பட்டு வந்தது. ஜனங்கள் அதைப் பார்த்து, ‘இது என்ன அறிகுறியோ !’ என்று பேசி வந்தார்கள். இன்று சுமார் 4 மணிக்குப் பூசனிக்காயளவு ஒரு நட்சத்திரம் ஒளியோடு காணப்பட்

**பகல் நட்சத்திரம்**

1. Despremenil

டது. அது வானத்தினின்று வடமேற்கு மூலையில் விழுந்தது. ஊராரெல்லாரும் அதைப் பார்த்தனர்; அஃது ஏதோ தீமைக்கு அறிகுறியென்று எண்ணினர். பகல் நேரத்தில் வானத்தினின்று எரி நட்சத்திரம் விழுவதை இதற்கு முன் பார்த்ததேயில்லை என்று ஒரு முகமாகக் கூறினர்.

*    *    *

**இரத்தாட்சி ஞ மார்கழி மீ 3உ (14-12-1744) திங்கட்கிழமை:**

**கவர்னர் பாலைய சுவாமியை வணங்கல்**

இன்று காலை 6 மணிக்குக் கவர்னர் துய்ப்ளேக்ஸ் முரட்டாண்டி சாவடியிலிருந்து திருவேங்கடபுரத்திலுள்ள எனது சத்திரத்திற்கு வந்தார். காலை 8 மணிக்குச் சிற்றுண்டி அருந்தி, பகலில் சாப்பிட்டு, மாலை 4 மணிக்குப் பொம்மைய பாளையம் பாலைய சுவாமி மடத்திற்கு வந்தார். கவர்னரும் அவர் மனைவியாரும் சுவாமியாருக்கு ஆறு கெஜம் துணியும், இரண்டு குப்பிப் பன்னீரும் காணிக்கையாகக் கொடுத்துத் தலை குனிந்துவணக்கஞ் செய்தனர். சுவாமியார் அவர்களுக்கு ஆசி கூறினர். பிறகு அவர்கள் புளியங்தோப்புக்குச் சென்று, சில பலகாரங்களும் காப்பியும் அருந்தி, முரட்டாண்டி சாவடிக்குச் சென்றார்கள்.

*    *    *

**குரோதன ஞ ஐப்பசி மீ 21உ (4-11-1745) வியாழக்கிழமை:**

கடந்த இரவு சூரியன் மறைந்தவுடனே புதுச்சேரியில் புயற்காற்று ஒன்று அடித்தது. அக்காற்று இரவு முழுதும் இருந்தது. அதனுல் ஏற்பட்ட சேதம், மதிப்பாகக் கூடச் சொல்லுவதற்கில்லை. இரவில் நகரிலிருந்த வேப்பஞ்சாலேயும், பூவரசு சாலேயும் வேரோடு பெயர்க்கப்பட்டுவிட்டன. பல மரங்கள் உருவமிழந்துவிட்டன. தென்னையும், மாவும், வேறு பல மரங்களும் சாலேகளிலும் தோட்டங்களிலும் கீழே சாய்ந்துவிட்டன. இதனுல், பலர் நட்டமடைந்தனர். உப்பாற்றங்கரைகளில் மக்கள் வீடு கட்டிக்கொண்டு வசித்து வந்தார்கள். இரவில் அந்த ஆறு கரைபுரண்டு வரவே, மதகு உடைபட்டுவிட்டது. இதனுல், புதிதாக அமைக்கப்பட்ட பாகத்திலிருந்த மூன்று தெருக்களிலுள்ள வீடுகள் அடித்துக்கொண்டு போகப்பட்டன. அழிந்த கட்டடங்களுக்கு மேல் தண்ணீர் ஒரு முழத்திற்கு ஓடிக்கொண்டிருந்தது. பலர் நீரில் மூழ்கிவிட்டனர். ஆடுமாடுகளும் அதிகமாய்ச் சேதமடைந்துவிட்டன. புதுச்சேரி வெள்ளத்தில் கிடந்தது. பள்ளத்தாக்கான இடங்களிலுள்ள தெருக்கள் வெள்ளத்தில் மூழ்கிவிட்டன. சில இடங்களில் நீர் இடுப்பளவிலும், சில இடங்களில் தொடையளவிலும் இருந்தது. தெருக்களில் பல வீடுகள் ஒன்றேடொன்று மோதிக்கொண்டன. காற்றடிக்கும்போது காகம் முதலிய பறவைகள் கணக்கில்லாமல் இறந்துபட்டுத் தெருக்களில் ஓடும் நீரில் மிதந்துகொண்டு

புயற்காற்று

போயின. இந்தக் காற்றின் கொடுமை நகரத்தோடு நிற்கவில்லை. வெளிகளிலும் பல வீடுகள் வீழ்ந்துவிட்டன. தோப்புகளெல்லாம் அழிந்துவிட்டன. கால் நடைகள் பல மரித்தன. இறந்துபோன ஆடுகளை நகரத்திற்குள் பலர் கொண்டு வந்து கூறு போட்டு வற்றல் இட்டனர். மழையினல் மாமிசம் ஈரமாயிருந்ததால், துர்நாற்றத்தை உண்டாக்கிற்று. இரண்டு நாள் வரையில் மக்கள் தெருக்களில் நடமாடாது அடைபட்டுக் கிடந்தார்கள். கடவுள் அருளால் வெயில் தோன்றிற்று. காற்றும் ஓய்ந்தது. மழையும் நின்றது. மூன்று மணி நேரத்திற்குள் வெள்ளம் வடிந்துவிட்டது. புயல் இன்னும் ஒரு நாள் அடித்திருக்குமானல், ஊரில் ஒரு கட்டடங்கூட நின்றிராது. மக்கள் செய்த தவப்பயனல், கடவுள் மேற்கொண்டு துன்பத்தை உண்டாக்காமல் நிறுத்தினர்.

* * *

*அக்ஷய ஹு ஆனி மீ 2உ (12-6-1746) திங்கட்கிழமை:*

இன்று காலை தெபோசே[1] என்னை வரவழைத்துச் சொன்னதாவது :—

"சென்ற வருடம் ஆவணி மாதம் பிரான்ஸ் தேசத்திலிருந்து புறப்பட்ட ஐந்து கப்பல்களும் 1746-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 3-ஆந் தேதி மாஸ்கரேஞ்[2] வந்து சேர்ந்தன. அக்கப்பல்களின் வழியாகத் தெ லாபுர்தோனேய்க்கு[3] ஆங்கிலேயர்களோடு சண்டை செய்ய உத்தரவு

கடற்போர்

1. De'Bausset 2. Mascareigne 3. De Labourdonnais

கிடைத்தது. அந்த உத்தரவுக்கிணங்க, அவர் அதற்கு வேண்டுவனவெல்லாஞ் செய்து, பிரான்ஸி லிருந்துவந்த கப்பல்களோடும், தாம் சித்தம் செய் துவைத்த கப்பல்களோடும் புறப்பட்டுவிட்டார். பிரான்ஸ் தேசத்திலிருந்து கப்பல்கள் வருவதற்கு முன்னமே அவர் கவர்னர் துய்ப்ளேக்ஸுக்கு, "எலிசபெத்து[1] என்னும் மரக்கலத்தின் மூலம் புதுச்சேரிக்கு மே மாதம் 30-ஆந் தேதி நாங்கள் வருகிறோம்," என்று ஒரு கடிதம் அனுப்பியிருந் தார். அந்த மரக்கலம் ஒன்றரை மாதத்திற்கு முன்னதாகக் காரைக்காலுக்கு வந்து கடிதத் தைக் கொடுத்துவிட்டு மாஸ்கரேஞ் சென்றுவிட் டது. அது நேராகக் கீழ்க்கரையை நோக்கிச் சென்றது. ஆங்கிலேயர் எதிர்ப்பட்டுவிட்டனர். அவர்கள் அதை நோக்கிச் சுட்டார்கள்; அதி லிருந்த ஆட்களையெல்லாம் கீழே இறக்கி அதைக் கைப்பற்றிக்கொண்டார்கள். அந்த மரக்கலம் கொண்டுபோன செய்திகளெல்லாம் அறியப்பட் டன. கப்பல்கள் வந்தால் அவை காரைக்கால் துறைமுகத்தில் இருக்குமென்றும் அங்குநோயாளி களையும் பணப் பெட்டிகளையும் இறக்கிவிடுவார்க ளென்றும் தெரிய வந்தது. அப்பணப் பெட்டி களைக் கொண்டு வருவதற்கும், இறக்கப்படும் ஆட் களுக்குப் பதிலாகவும், கவர்னர் போர் வீரர்களை யும் மாஹே சிப்பாய்களையும் அங்கு அனுப்பி வைத்துக் கப்பல்களின் வரவை எதிர்பார்த்திருந் தார். சுமார் பத்து நாட்களாகக் கடலைப் பார்த்த வண்ணமாயிருக்கிறார்."

1. Elizabeth

அக்ஷய ஸூ ஆனி மீ 29உ (9-7-1746) சனிக்கிழமை:

இன்று காலை துறைமுகத்தைப் பார்க்கும் போது நேற்றுப் பகல் வந்த கப்பலும், இரவில் வந்த எட்டுக் கப்பல்களும் ஒன்ருய்ச் சேர்ந்திருந்தன. காலை 8 மணிக்கு லாபுர்தொனே[1] ஏறியிருந்த கப்பலிலிருந்து, 15 குண்டுகள் போடப்பட்டன. கோட்டையிலிருந்தவர்களும் குண்டுகளைப் போட்டார்கள். அக்கப்பல்களில் ஐந்து, பிரான்ஸ் தேசத்திலிருந்து 1745-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் புறப்பட்டவை. அவை, 1746-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 3-ஆந் தேதி மாஸ்கரேஞ் வந்து சேர்ந்தன. அங்கு நாட்டுக் கப்பல்கள் நான்கு இருந்தன. அவை சண்டைக்குச் சித்தஞ் செய்யப்பட்டன. ஆக ஒன்பது கப்பல்களோடு, வங்காளத்து வியாபாரக் கப்பலாக மரி ழொஜேப்பு[2] என்னும் கப்பலும் சேர்க்கப்பட்டது. மதகஸ்கார்[3] தீவுக்குச் சென்று, அங்கு உணவுப் பொருள்கள் சேமிக்கப்பட்டன. வழியில் காற்றும் மழையும் பலமாய் அடிக்கவே, பாய்மரங்களும், சுக்கான்களும் உடைந்துவிட்டன. கப்பல்கள் நீரில் மூழ்குந் தறுவாயிலிருந்தன. தெய்வ சகாயத்தால் காற்று அடங்கிற்று. மழை நின்றது. கடல் ஓய்ந்தது. கப்பல்கள் தப்பின. பாய்மரங்கள் பழுதுபார்க்கப்பட்டு, கப்பல்கள் புறப்பட்டன. ஆனால், மீண்டும் ஒரு முறை காற்றும் மழையும் வரவே, மறுபடியும் பாய்மரங்கள் பழுது பார்க்கப்பட வேண்டியவை ஆயின.

1. La Bourdonnais  2. Marie Joseph  3. Madagascar

ஒரு மாதம் அல்லது நாற்பது நாள் தாமதமாய் இலங்கை முனைக்கு வரவேண்டியதாயிற்று. அங்கிருந்து பிரயாணப்பட்டு, நாகப்பட்டினத்திற்குத் தெற்கில் வருங்கால் பெய்ட்டன்[1] என்ற தளபதியால் செலுத்தப்பட்ட ஆங்கில யுத்தக் கப்பல்கள் காணப்பட்டன. நான்காம் நாள் பிற்பகல் 4 மணிக்குப் பிரெஞ்சுக் கப்பல்களுக்கும் ஆங்கிலக் கப்பல்களுக்கும் சண்டை தொடங்கிற்று. இரவு 7 மணி வரையில் போர் நடந்தது. பிரெஞ்சுக்காரர்களில் 700 பேரும், லாபுர்தொனே கப்பலும், தெ லாசேல்[2] கப்பலும் ஆங்கிலக் கப்பல்களோடு போர் புரிந்தன. இந்த நேரத்தில் 80,000 குண்டுகள் எறியப்பட்டன. ஆங்கிலக் கப்பல்கள் ஆறிலும் நல்ல போர் வீரர்கள் இருந்தமையால், அவர்கள் நன்ருகச் சமர் செய்தார்கள். ஆங்கிலேயர்களுக்குக் காற்றுத் துணை செய்தது. பிரெஞ்சுக்காரர்களுக்குக் காற்று எதிராய் இருந்ததன்றி, நங்கூரம் போடுவதற்கும் வசதியில்லாமலிருந்தது. மேலும், இரண்டு கப்பல்களில் மருந்து பீப்பாய்கள் இருந்ததால், சேதமும் ஏற்பட்டது. அவற்றில் பிரான்ஸ் தேசத்துப் பணப் பெட்டிகளும், துணிகளும், சாராய வகைகளும் இருந்தன. வெற்றியோ தோல்வியோ நிச்சயமாக இல்லாததனுல், 15 காத தூரத்திலிருக்கும் புதுச்சேரிக்குப் போய்விடுவதே நன்றென்று பிரெஞ்சுக்காரர்கள் புறப்பட்டு விட்டார்கள். ஆங்கிலக் கப்பல்களிலும் இரண்டு அதிக சேதமடைந்தன. அவற்றிலிருந்த ஆட்கள் மிகுந்த துன்பமுற்ருர்கள். அவ்விரண்டு கப்பல்

1. Peyton 2. De Laselle

களும் பயனற்றனவாய்ப் போய்விட்டன என்று சொல்லப்படுகிறது.

* * *

விபவ ளு ஆவணி மீ 18 உ (30-8-1748) வெள்ளிக்கிழமை:

இன்று காலையில் கிடைத்த செய்திகள் வருமாறு:—

அரியாங்குப்பம் கோவிலிலிருந்த சிப்பாய்களை அதை விட்டு வரும்படி சொன்னதால், அவர்கள் வந்துவிட்டார்கள். ஆங்கிலேயர்கள் அதனைக் கைப்பற்றிக்கொண்டு, தங்கள் போர் வீரர்களை அங்கு நிறுத்தி, அதற்கு முன்பாக வளைவான சுவர் ஒன்று எழுப்பினார்கள்; சுவரின் மீது 7 பீரங்கிகளை வைத்தார்கள்; அதிகாலையில் நம் படைகளை நோக்கி ஆற்றுக்கு இப்பால் சுடத் தொடங்கினார்கள். 50 அல்லது 60 ஹோலாந்து[1] சிப்பாய்களும், வெள்ளைக் குதிரை வீரர்களும், காலாட்படையினரும், 50 அல்லது 60 காப்பிரிகளும் நம் படைகளுக்கு உதவியாக அனுப்பப்பட்டார்கள். அவர்களெல்லாரும் எதிர்த்துப் போராடினார்கள். நம் குதிரை வீரர்கள் துப்பாக்கிகளினால் சுட்டார்கள். ஓராயிரம் ஆங்கிலேயர்கள் எதிர்த்து வந்தார்கள். ஹோலாந்துக்காரர் பின் வாங்கினர். நம் சிப்பாய்களும் அவ்வாறே செய்தார்கள். மகமதிய குதிரை வீரர்கள் துணிந்து நின்றார்கள். இந்தச் சண்டையில் பகைவர் பக்கம்

**தரைப் போர்**

1. Holland

50 அல்லது 60 பேர் காயமடைந்தும் இறந்தும் போயினர். காலாட்படைத் தளகர்த்தர் ஒருவர் சிறை பிடிக்கப்பட்டார். தேவனும்பட்டின அதிபரும், இன்னும் ஐந்தாறு வெள்ளைக்காரரும்சிறை செய்யப்பட்டனர். நமது குதிரைப் படை மாத்திரம் நின்று சண்டை செய்ததால், பராதி என்பவர் எல்லாப் படைகளிலிருந்தும் ஆங்கிலப் பட்டாளத்தின்மீது சுடும்படி உத்தரவிட்டார். கொசினே[1] இரண்டு குண்டுகளினுலும் ஒரு வாளினுலும் காயமுற்று எதிரி கையில் சிக்கிக்கொண்டார். நம் குதிரை வீரர்களில் 5 பேர் இறந்துவிட்டனர். 5 பேர் காயமுற்றனர். 3 குதிரைகள் மடிந்துவிட்டன. 9 குதிரைகளுக்குக் காயமுண்டாயிற்று. நம் சிப்பாய்கள் தேவனும்பட்டினத்து அதிபரையும், ஆங்கிலத் தளகர்த்தரையும் ஐந்தாறு போர் வீரர்களுடன் துரையினிடத்தில் அழைத்து வந்தார்கள். துரை, அவர்களை மற்றவர்களோடு சிறையில் இடச்செய்தார். தேவனும்பட்டினத்து அதிபரையும் தளகர்த்தரையும் அழைத்துக்கொண்டு தொத்தேயிடம் சென்றூர்கள். அவர்கள் தாங்களறிந்த இரகசியங்கள் எல்லாவற்றையும் கூறிவிட்டார்கள். ஆதலால், அவர்கள்பால் சிறிது கருணை காட்டப்பட்டது. அவர்களுக்கு உடைகளும் இரண்டு வைரமோதிரங்களும் கொடுக்கப்பட்டன. எதிரிகளுடைய எண்ணங்களெல்லாம் அறியப்பட்டன. ஆகையால், அவர்களுக்கு வாளும் கைத்தடியும் வைத்திருக்க அனுமதி தரப்பட்டது.

* * * *

1. Cossinet

ஸ்ரீமுக ௵ சித்திரை ௴ 16 உ (24-4-1753)

இன்று ஒரு திருநாள். கவர்னர் காலை 10 மணிக்குக் கோவிலுக்குப் போய்ப் பூசை கண்டார். திரும்பி வந்ததும் மூர்த்தாசா அலிகான் எழுதிய கடிதச் செய்திகள் சொல்லப்பட்டன. அக்கடிதம் ஓர் ஒட்டகக்காரனுல் கொண்டுவரப் பட்டது. அதில் குறிப்பிட்டிருந்ததாவது:—

“1000 காலாட்களும், 100 ஐரோப்பியரும், தளகர்த்தரும், அப்துல் வகாப்கானுடைய 200 அல்லது 300 குதிரை வீரரும் நேற்று முன் தினம் வேலூரைத் தாக்கச் சென்று, குப்பத்தில் தங்கியிருக்கும் பொழுது என் ஆட்கள் அவர்களைத் தாக்கி, அப்துல் வகாப்கானை ஓடச் செய்தார்கள். பீரங்கிகள் 2, ஓர் ஒட்டகத்தின்மீதிருந்த பேரிகை 1, ஆங்கிலப் போர் வீரர்களின் தளகர்த்தர், ஐரோப்பியர் 5 அல்லது 6 பேர், துப்பாக்கிகள் 100 ஆகியவற்றை நாம் கைப்பற்றினேம். சுமார் 100 பேருக்குக் கொல்லப்பட்டனர். மற்றவர் நானா பக்கங்களிலும் ஓடினர்.”

ஒட்டகக்காரன் இச்செய்திகளை உறுதிப் படுத்தினன். அவனுக்கு 50 ரூபாயும், 2 கெஜம் துணியும் கொடுக்கப்பட்டன. மூர்த்தாசா அலிகானைப் பாராட்டிப் பதில் எழுதப்பட்டது.

* * *

# அனுபந்தம்

## I. அபிதான அகராதி

[எண்—பக்க எண்]

## II. ஊர்ப் பெயரகராதி

[எண்—பக்க எண்]

## III. கப்பல்களின் பெயர்கள்:

ஆனந்தப்புரவி, *20, 41, 125.*
எலிஸபெத்து (Elisabeth), *131.*
துய்க் தொர்லயான் (Duc d'Orleans), *114.*
மரி ழொஜேப்பு (Marie Joseph), *132.*
பிரின்ஸெஸ் மேரி (Princess Mary), *118.*

## IV. ஆராய்ந்த நூல்கள்

### A. பிரெஞ்சு நூல்களும் சஞ்சிகைகளும்:


1. Dupleix—*Henri Bionne*
2. Dupleix—*Jouveau Dubreuil*
3. Dupleix-Ses expeditions et ses projets—
   *H. Castonnet Des Fosses*
4. Dupleix-Ses dernieres luttes davs l'Inde—
   *H. Castonnet Des Fosses*
5. Dupleix ou les Francais aux Indes Orientales—
   *Clarin De La Rive*
6. Eloge historique de Dupleix—*Le Fevre*
7. Catalogue des Manuscrits des Anciennes Archives de l'Inde francaise 1816-1818
8. Le Vieux Pondichery—*Mme. V. Labernadie*
9. Les Francais dav's l'Inde—*Julien Vinson*
10. Expedition du General Bussy davs le Deccan au XVIII Siecle—*H. Castonnet Des Fosses*
11. L'Inde Francaise au XVIII siecle—
    *H. Castonnet Des Fosses*
12. Histoire de l'Inde Francaise—
    *H. de Closets d'Errey*
13. Cre'ole et Grande Dame—*Mme. Yvonne Robert Gaebele*
14. Un livre de Compte d'Ananda Ranga poulle'—
    *R. P. Oubagarasamy Bernadotte*
15. Annuaire des Etablissments Francais davs l'Inde.

B. ஆங்கில நூல்கள் :

1. Ananda Ranga Pillai's Dairy Vol. I—XII.
2. Ananda Ranga Pillai—
*Rao Sahib C. S. Srinivasachari, M. A.,*

C. தமிழ் நூல்களும் சஞ்சிகைகளும் :

1. நந்தமண்டல சதகம்
2. தனிப்பாடற்றிரட்டு
3. இராம நாடகம் (அருணசலக் கவிராயர்)
4. ஆனந்தரங்கக் கோவை
5. யாதவ மித்திரன்
6. பால பாரதி
7. கலைமகள்

D. தெலுங்கு நூல் :

ஆனந்தரங்கராட்சந்தமு

## V. செய்யுட் குறிப்புரை :

பக். 1. தோன்றின் - ஒருவர் இவ்வுலகிற் பிறப்பாராயின், தோன்றுக - பிறக்கக் கடவர்.

பக். 25. விசாகரைப்போல-முருகக் கடவுளைப் போல, தியாகர் - தியாகராயப் புலவர், விளம்பிய - பாடிய, சத்த சாகரம்-எழு பெருங்கடல், கோவை-ஒரு பிரபந்தம், சத்தாங்கம்-எழுவகைப் பரிசில்கள், நல்கி-கொடுத்து, நிசாகரன் - (இரவை விளக்குபவன்) சந்திரன், வசாரதன் - ஒரு பட்டப்பெயர்.

'சத்த சாகரமான பொருட்கோவை' என்றது, எழுவகைக் கடலிற்றோன்றும் எண்ணில்லாத கடல்படு பொருள்களைப் போலக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்னும் எழுதிணைகளில் எண்ணில்லாத அகப்பொருட் செய்திகளமையப்பெற்ற கோவை என்பதைக் குறித்தது.

பக். 27. உலம் கொண்ட - திரண்ட கல்லைத் தனக்கு உவமையாகக் கொண்ட, மணிப்புயனே - அழகிய தோள்களையுடையவனே, வலம் கொண்ட-வெற்றிகொண்ட, இடம் - இடப்பக்கம், எழில் - அழகையுடைய, நரையான் - மீன்கொத்திப் பறவை, வலத்தே - வலப்பக்கத்தில், பொலம்-மேன்மை, மணிமாடம்-அழகியமாளிகை, மீமிசை - உச்சியில், புயல் - மேகம், புதுவை - புதுச்சேரி, தலம் - இடம், நகை - புன்சிரிப்புடன் கூடிய, தனம் - செல்வம்.

பக். 29. நராதிபனே - மக்களுக்குத் தலைவனே, திக்கு விசயம் செலுத்தி - எட்டுத் திசைகளிலும் வெற்றிப் பிரதாபத்தைச் செல்லச்செய்து. துணிவு கருதிப் புலவர் 'பறவேன்' என்பதை மும்முறை அடுக்கிக்கூறினர்.

பக். 31. 'பங்கேருகம், பானுகிரணம் பார்க்கும் ; சகோரங்கள், நிலவு வரப் பார்க்கும் ; மயில்கள், வான் அமரும் மையைப் பார்க்கும் ; புலவோர் கண், மா விசய ஆனந்தரங்கன் கையைப் பார்க்கும்.'

பங்கேருகம் - தாமரை மலர், பானு - சூரியன், சகோரம் - சக்கரவாகப்பறவை, மை - மேகம், புலவோர் கண் - அறிஞர்களுடைய கண்கள், மா விசயம்- பெரு வெற்றி.

பக். 32. தோன்றலின் - பிறத்தலைக்காட்டிலும், தோன்ருமை - பிறவாதிருத்தல்.